ழக வெளியீடு, ககநக



உ

திருச்சிற்றம்பலம்

# தேவார ஒளிநெறி

## (சுந்தரர்)

[ஆராய்ச்சிப் பகுதி : தலைப்பு 1—261]



தணிகைமணி ராவ்பகதூர்

வ சு செங்கல்வராய பிள்ளை, எம் ஏ

எழுதியது



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி—6. சென்னை - 1.

1963

# பதிப்புரை

"மாதவஞ் செய்த தென்திசையும்" ஏதமிலா இயற்கைச் செந்தமிழும், ஓதலாஞ் சிறப்புடைய போதமிகு செந்நெறியும் முறையே உறையுள், உடல், உயிர் எனப் பின்னிப் புணர்ந்து மன்னித் திகழ்கின்றன. செந்தமிழ் நாட்டுச் செந்நெறி உலகப் பொதுநெறியாம் தன்மை வாய்ந்த சைவப் பெருநெறியாகும். அதுவே வையத்துக் காணப்படும் நெறிகளுள் வாய்மைத் தொன்னெறியாகும். இந் நெறியினை 'ஒளிநெறி' எனவும் வழங்குப. இந்நெறிக்குரிய புகழ்நூல்கள் பன்னிரு திருமுறைகளாகும். பொருள் நூல்கள் பதினான்கு மெய்கண்ட நூல்களாகும். திருமுறைகளுள் மூவர் முதலிகள் அருளிய தேவாரங்கள் ஏழு திருமுறைகளாகும்.

அவை முறையே ௩௮௩, ௩௧௩, ௧௦௦ என்பனவாகும். இம்மூவர் பாடல்களுக்கும் அடங்கன்முறை என்னும் தனித் திருப்பெயர் வழங்குகின்றது. அன்பியல், அருளியல், அடியியல் முதலிய எவ்வியல் வாழ்க்கைக்கும் யார்க்கும் யாண்டும் இன்றியமையாது வேண்டப்படுவது அடக்கமேயாம். அடக்கம் என்பது நல்வழி யொழுகுதல். அம்மட்டுமன்றி அவ்வொழுக்கத்தின் பெறு பேருகத் திருவடிக்கண் வேறறப் புணர்ந்து நிற்றலும் பெறப்படும். இவற்றின் திருப்பாட்டுக்கள் ௮௨௫௦ ஆகும். இவற்றின் அருமை பெருமைகளை நம்மனோர் எளிதி னறிந்து இடையறாது ஓதியுய்தற்கு ஒப்பில் திருவருள் வழிகாட்டி ஒருவர் வேண்டும்.

முன் திருவருளால் திருமுறைகளை வகுத்து வழிகாட்டிய அருளாளர் நம்பியாண்டார் நம்பியாவர். இவர் மூத்த பிள்ளையாரின் மெய்யடியார். இவ்வடங்கன் முறைக்கு வழிகாட்டியாய

அருளாளர் தணிகைமணி, ராவ்பகதூர் வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம். ஏ., அவர்களாவர். இவர்கள் இளைய பிள்ளையாரின் மெய்யடியார். அம்மட்டுமன்று; திருமுருகன் திருவடிக்கண் அவன் அருள்பெற்ற மெய்யடியார்கள் பாடியருளிய பாமாலைகளை "முருகவேள் பன்னிரு திருமுறை" எனத் திருவருள்கொண்டு வகுத்துள்ளார்கள். அப் பெரியாரவர்களே "தேவார ஒளிநெறி" என்னும் அடங்கன்முறையின் வழிகாட்டி என்னும் அருள் நூலை ஆக்கித் தந்துள்ளார்கள்.

அந்நூல் சம்பந்தப் பெருமானார் தேவாரங்களுக்கு மூன்று பகுதிகளும், அப்பர் பெருமானார் தேவாரங்களுக்கு இரண்டு பகுதிகளும், சுந்தரப் பெருமானார் தேவாரங்களுக்கு ஒரு பகுதியுமாக வகுத்துத் தந்துள்ளார்கள். அவை முழுவதும் பற்பல தலைப்புக்களில் அமைந்துள்ளன. மேலும் பின்னிணைப்பாக அகரவரிசையில் அரிய சொற்களும் சேர்க்கப்பட்டுள்ளன. மூவர் ஒளிநெறிக்கும் கட்டுரைப் பகுதிகளும் தனித்தனி நூல்களாக வெளிவந்துள. இத் 'தேவார ஒளிநெறி' என்னும் நூல்கள் அடங்கன் முறையாகிய அருட் கருவூலத்திற்குப் பொருந்திய திறவு கோலாகும்.

இத் 'தேவார ஒளிநெறி'யின் சிறப்புக்களனைத்தும் அவ்வப் பதிப்புரைகளில் விரித்து விளக்கியுள்ளாம். ஆண்டாண்டுக் காண்க.

இவ்வரிய திருப்பணியினை ஒரு பெரிய பல்கலைக்கழகத்தார் பல்பெரும் பேராசிரியர்களை அமர்த்திப் பல நூறாயிர வெண்பொற் காசுகளையும் செலவிட்டுப் பல ஆண்டுகளாக முடிக்க வேண்டிய பெருஞ்செயலாகும். அதனை நம் பெரியாரவர்கள் திருவருட்டுணையால் கூட்டொருவரை வேண்டாக் கொற்றத் திருவின் ஒருவராய் நின்று ஏறத்தாழ முப்பத்து மூன்று யாண்டுகள் புரிந்துவந்த சிவத்தொண்டாய் நிறைவேற்றியுள்ளார்கள். அவ்வனைத்தும் கழக வாயிலாக வெளிவந்துள்ளன.

இஃது ஏழாந் திருமுறையாகிய சுந்தரப் பெருமானின் தேவார ஒளிநெறியாகும். இதன்கண் 261 தலைப்புக்கள் காணப்படும். இதனை அருளால் ஆக்கித் தந்த நம் பெரியாரவர்கள் இன்னும் பல்லாண்டு நன்னலமுடன் வாழ்ந்து இவ்வினைய சிறந்த தொண்டுகள் பல புரிந்துவாழத் திருவருள் சுரக்க அம்மை யம்பலவாணர் செம்மலர் நோன்றாளைத் தொழுவாம். நம் பெரியாரவர்கட்குக் கழகத்தாரின் நன்றியும் வாழ்த்தும் வணக்கமும் என்றும் உரியவாகுக.

இந்நூல் வெளியீட்டுச் செலவுத் தொகையில் ஒரு பகுதி மத்திய அரசின் அறிவிய லாராய்ச்சி பண்பாடு செய்தித்துறை அமைச்சரால் நன்கொடையாக வழங்கப்பெற்றிருக்கிறதென்பதை நன்றியறிதலுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

இத் தொகுதிகளைச் செந்நெறிச் செல்வர்களும் செந்தமிழன்பர்களும் வாங்கிக் கற்றும் கற்பித்தும் நற்பயன் எய்துவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.



தணிகைமணி,

திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம். ஏ.

# முகவுரை

திருத்தணிகேசர் துணை

"ஆரூரன் உரைத்ததமிழ், சொல்லுதல் கேட்டல் வல்லார் அவர்க்கும் மார்க்கும் கிளைக்கும், எல்லியும் நண்பகலும் இடர்கூருதல் இல்லை ன்றே."
—சுந்தரர், 7-22-10.

"பாவர்ப் பொழிந்த வானமுதப் பவளத் திருவாய் நம்பி' எனவும் "படியிலா நின் பாட்டில் ஆரூர! நனிவிருப்பன் பரமன்" எனவும் அருமையாகப் பாராட்டப்பட்டவர் நம்பியாரூரர் எனப் படும் சுந்தரமூர்த்திப் பெருமான். இவர் அருளிய திருப்பாட்டு பன்னிரு திருமுறைகளில் ஏழாவது திருமுறையாகும். சம்பந்தப் பெருமான், அப்பர் பெருமான் இவர்கள் அருளிய ஆறு திரு முறைகளுக்குரிய ஒளிநெறிப் பகுதியும், கட்டுரைப் பகுதியும் முன்னரே அச்சேறி வெளிவந்துள்ளன. சென்ற ஆண்டு (1962) ஏழாந் திருமுறையின் கட்டுரைப் பகுதி வெளிவந்தது. இறைவன் திருவருள் கூட்டி வைக்க ஏழாந் திருமுறையின் ஒளிநெறிப் பகுதியாய் இந்நூல் இப்போது வெளிவருகின்றது.

தேவாரத்திலுள்ள பொருளை அவ்வத் தலைப்பின்கீழ் விளக்கமாய் எடுத்துக்காட்டும் காரணத்தால் இவ்வாராய்ச்சி நூல்களுக்குத் 'தேவார ஒளிநெறி' என்று பெயர் சூட்டப்பட்டது. 'ஒளிநெறி' என்னும் இச்சொற்றொடர் திருஞானசம்பந்தர் அருளிய திருவெழுகூற்றிருக்கையில் வரும் "ஓரால் நீழல் ஒண்கழல் இரண்டும் முப்பொழுதேத்திய நால்வர்க்(கு) ஒளிநெறி காட்டினை" என்னும் மறை மொழிகளில் நின்றும் இறைவன் நினைவு ஊட்டியதாகும்.

"சங்கரா! சம்புவே! சங்கரா! சம்புவே!
சங்கரா சம்புவே! சாம்ப சிவனே! என்
அங்கணா என்றென்றும் ஓலிட் டழைத்தரற்றும்
இங்கெனக்கு வாழ்நாள்கள் இவ்வாறே போகியவே"

எனவரும் சிவஞானமுனிவரின் திருவாக்கு என் உள்ளத்தில் அழுந்திக் கிடந்த காரணத்தால் எழுதப்பெற்ற இவ்வொளி நெறிப் பகுதிகளைச் சைவ உலகத்துக்குப் பயன்படச் செய்த பெருமை சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்துக்கே உரிய தாகும். இக் கழகத்துக்கு உயிர்நாடியாயுள்ள தலைவர் சைவத் திருவாளர் வ. சுப்பைய பிள்ளையவர்களும் அவருக்கு உறு துணை யாய் நிற்கும் கழக உறுப்பினராம் பெரியோர்களும், இறைவன் திருவருளால் நோயின்றிப் பல்லாண்டு வாழி, வாழி, வாழி என வாழ்த்துதல் அன்றி வேறு எவ்வகையில் எனது நன்றியை நான் தெரிவிக்கக்கூடும்.

"அன்றுவன் செங்கலை அம்பொன் ஆக்கிய
தென்றமிழ் நாவலன் தீய என்னையும்
துன்றிய நலம்திகழ் தூயன் ஆக்குவன்
என்றவன் இணையடி இறைஞ்சு வேனரோ."

—சானந்த கணேச புராணம்.

"வழிவிடுத்த தொருநதி,ஒண் பொன்கொணர்ந்த
தோராறு, வரும்பொன் வாங்கிக்
கழிகொடுத்த தொருபொய்கை, அளித்ததொரு
கயம்கரவு கரந்த சேயை
மொழிவசத்திற் கவைபோல்இப் பரவையிணங்
குவதரிது முதல்வா! என்று
விழிதரித்தும் அரிகாணப் பாதனைத்தா
தேவினனை விழைந்து வாழ்வாம்."

—திருக்கழுக்குன்றப் புராணம்.

திருச்சிற்றம்பலம்.

293, லிங்க செட்டித் தெரு,
சென்னை-1,
12-9-1963.

வ. சு. செங்கல்வராய பிள்ளை.

# உள்ளுறை

# தேவார ஒளிநெறி

## சுந்தரர்



## ஆராய்ச்சித் தலைப்புக்களும் தலைப்புக்களின் எண்ணும்

# முற்சேர்க்கை—I

[தேவார ஒளிநெறியிற் காட்டிய பதிக எண்களின் விளக்கம்]

## ஏழாந்திருமுறை

| பதிக எண் | தலம் | பதிகத் தொடக்கம் |
|---|---|---|
| 1. | திருவெண்ணெய் நல்லூர் | பித்தா பிறை |
| 2. | திருப்பரங் குன்றம் | கோத்திட்டை |
| 3. | திருநெல்வாயில் அரத்துறை | கல்வாய் |
| 4. | திரு அஞ்சைக்களம் | தலைக்குத்தலை |
| 5. | திருஓண காந்தன் தளி | நெய்யும் |
| 6. | திருவெண்காடு | படங்கொள் |
| 7. | திரு எதிர்கொள்பாடி | மத்தயானை |
| 8. | திருவாரூர் | இறைகளோ |
| 9. | அரிசிற்கரைப் புத்தூர் | மலைக்கு |
| 10. | கச்சி அனேகதங்காவதம் | தேனெய் |
| 11. | திருப்பூவணம் | திருவுடை |
| 12. | திருநாட்டுத் தொகை | வீழக் |

| பதிக எண் | தலம் | பதிகத் தொடக்கம் |
|---|---|---|
| 13. | திருத்துறையூர் | மலையார் |
| 14. | திருப்பாச்சிலாச்சிராமம் | வைத்தனன் |
| 15. | திருநாட்டியத்தான்குடி | பூணண் |
| 16. | திருக்கலய நல்லூர் | குரும்பை |
| 17. | திருநாவலூர் | கோவலன் |
| 18. | வேள்விக்குடி | மூப்பதுமில்லை |
| 19. | திருநின்றியூர் | அற்றவன் |
| 20. | திருக்கோளிலி | நீள |
| 21. | கச்சி மேற்றளி | நொந்தா |
| 22. | மண்ணிப் படிக்கரை | முன்னவன் |
| 23. | திருக்கழிப்பாலை | செடியேன் |
| 24. | திருமழபாடி | பொன்னார் |
| 25. | திருமுதுகுன்றம் | பொன் செய்த |
| 26. | திருக்காளத்தி | செண்டாடும் |
| 27. | திருக்கற்குடி | விடையாரும் |
| 28. | திருக்கடவூர் | பொடியார் |
| 29. | திருக்குருகாவூர் | இத்தனை |
| 30. | திருக்கருப்பறியலூர் | சிம்மாந்து |
| 31. | திருஇடையாறு | முந்தையூர் |
| 32. | கோடி | கடிதாய் |
| 33. | (நமக்கடிகளாகிய அடிகள்) | பாறுதாங்கிய |
| 34. | திருப்புகலூர் | தம்மையே |
| 35. | திருப்புறம்பயம் | அங்கமோதி |
| 36. | திருப்பைஞ்ஞீலி | காருலாவிய |
| 37. | திருவாரூர் | குருகுபாய |
| 38. | திரு அதிகை | தம்மானை |
| 39. | திரு ஆரூர் (திருத்தொண்டத் தொகை) | தில்லைவாழ் |
| 40. | திருக்கானாட்டு முள்ளூர் | வள்வாய |
| 41. | திருக்கச்சூர் | முதுவாய் |
| 42. | வெஞ்சமாக்கடல் | எறிக்கும் |
| 43. | திருமுதுகுன்றம் | நஞ்சியிடை |
| 44. | | முடிப்பது கங்கை |
| 45. | திரு ஆமாத்தூர் | காண்டனன் |
| 46. | நாகைக் காரோணம் | பத்தூர் |
| 47. | (ஊர்த்தொகை) | காட்டூர் |
| 48. | பாண்டிக் கொடுமுடி | மற்றுப்பற் |
| 49. | திருமுருகன்பூண்டி | கொடுகு |
| 50. | திருப்புனவாயில் | சித்தம் |
| 51. | திருவாரூர் | பத்திமை |

| பதிக எண் | தலம் | பதிகத் தொடக்கம் |
|---|---|---|
| 52. | திருவாலங்காடு | முத்தா |
| 53. | கடவூர் மயானம் | மருவார் |
| 54. | திருஒற்றியூர் | அழுக்கு |
| 55. | திருப்புன்கூர் | அந்தணாளன் |
| 56. | திருநீடூர் | ஊர்வ |
| 57. | வாளொளி புற்றூர் | தலைக்கலன் |
| 58. | கழுமலம் (காழி) | சாதலும் |
| 59. | திரு-ஆரூர் | பொன்னும் |
| 60. | திரு-இடைமருதூர் | கழுதை |
| 61. | கச்சி-ஏகம்பம் | ஆலந்தான் |
| 62. | கோலக்கா | புற்றில் |
| 63. | திருமுதுகுன்றம் (நம்பி என்ற திருப்பதிகம்) | மெய்யை |
| 64. | திருத்தினைநகர் | நீறுதாங்கிய |
| 65. | திருநின்றியூர் | திருவும் |
| 66. | திரு-ஆவடுதுறை | மறையவன் |
| 67. | திருவலிவலம் | ஊனம் |
| 68. | திருநள்ளாறு | செம்பொன் |
| 69. | திருமுல்லைவாயில்-வட | திருவுமெய்ப் |
| 70. | திரு-ஆவடுதுறை | கங்கைவார் |
| 71. | திருமறைக்காடு | யாழைப் |
| 72. | திருவலம்புரம் | எனக்கினி |
| 73. | திரு-ஆரூர் | கரையும் |
| 74. | திருத்துருத்தி | மின்னுமா |
| 75. | திரு-ஆனைக்கா | மறைகள் |
| 76. | திருவாஞ்சியம் | பொருவனார் |
| 77. | திரு ஐயாறு | பரவும் பரிசு |
| 78. | திருக்கேதாரம் | வாழ்வாவது |
| 79. | திருப்பருப்பதம் | மானும் |
| 80. | திருக்கேதீச்சரம் | நத்தார் |
| 81. | திருக்கழுக்குன்றம் | கொன்று செய்த |
| 82. | திருச்சுழியல் | ஊனாயுயிர் |
| 83. | திருவாரூர் | அந்தியும் |
| 84. | திருக்கானப்பேர் | தொண்டரடித் |
| 85. | திருக்கூடலையாற்றூர் | வடிவுடை |
| 86. | வன்பார்த்தான் பனங்காட்டூர் | விடையின்மேல் |
| 87. | திருப்பனையூர் | மாடமாளிகை |
| 88. | திருவீழிமிழலை | நம்பினார் |
| 89. | திருவெண்பாக்கம் | பிழையுளன |
| 90. | கோயில் | மடித்தாடு |

| பதிக எண் | தலம் | பதிகத் தொடக்கம் |
|---|---|---|
| 91. | திருஒற்றியூர் | பாட்டும் பாடி |
| 92. | (புக்கொளியூர்) அவிநாசி | எற்றான் |
| 93. | திருநறையூர் | நீரும் மலரும் |
| 94. | திருச்சோற்றுத்துறை | அழனீர் |
| 95. | திரு ஆரூர் | மீளா அடிமை |
| 96. | திரு ஆரூர்ப் பரவை யுண்மண்டளி | தூவாயா |
| 97. | திருநனிபள்ளி | ஆதியன் |
| 98. | நன்னிலம் | தண்ணியல் |
| 99. | திருநாகேச்சரம் | பிறையணி |
| 100. | கயிலாயம் (நொடித்தான்மலை) | தானெனை |

## முற்சேர்க்கை—II

### சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் பாடப்பெற்ற தலங்களும், சொல்லப்பட்ட தலங்களும், அவைக்குரிய பதிக எண்களும்

1. தடித்த அச்சில் உள்ள எண்கள் முழுப் பதிகங்களைக் குறிக்கும்.

2. வேறு தலத்துக்கு உரிய பதிகங்களிற் சொல்லப்பட்ட தலங்கள் - பதிக எண் - பாட்டின் எண் இரண்டுடனும் குறிக்கப்பட்டுள.

[பாடல்பெற்ற தலங்களின் இருப்பிடம் முதலிய விவரங்கள் எங்கள் 'சிவஸ்தல மஞ்சரி' என்னும் நூலிற் காணலாகும்.]

| | | பதிக எண் | மொத்தப் பதிகம் |
|---|---|---|---|
| 1. | **அஞ்சைக் களம்** (1) | **4**, *[44]. 100-10 | 1 |
| 2. | அண்ணாமலை | 2-6; 31-3; 47-7 | |
| 3. | **அதிகை** (2) | 19-5; **38** | 1 |
| 4. | அம்பர் (மாகாளம்) | 39-5; 47-5 | |
| 5. | **அரிசிற்கரைப் புத்தூர்** (3) | **9** | 1 |
| 6. | **அவிநாசி** (புக்கொளியூர் அவிநாசி) (4) | **92** | 1 |
| 7. | அழுந்தூர் | 47-1 | |
| 8. | ஆக்கூர் | 31-8 | |
| 9. | **ஆமாத்தூர்** (5) | **45** | 1 |
| 10. | **ஆரூர்** (6) | 1-10; 2-6; 5-9; **8**; 31-1; 32-8; **37, 39** (39-10): 41-10; 46-2; 8; 47-4; **51**; 53-7; **59**, 60-4; 70-6; **73**; **83**; 86-10: 89-11; 90-10; **95** | 8 |

* பெரிய புராண விரிவுரை. கழறிற்றறிவார் 146 கீழ்க் குறிப்பு.

எய்தமான் - நடுநாட்டின் ஒரு பகுதியா? இடையாறு இடை இடையாற்றில், மருது - திருக்கோயிலின் பெயர். கல்வெட்டில் இடையாற்றுத் திருக்கோயிலுக்குத் "திருமருதந்துறை" என்று பெயர். (சமாஜப் பதிப்பு).

| | | | |
|---|---|---|---|
| 75. | தருமபுரம் | 12-1 | |
| 76. | தலையாலங்காடு | 12-2 | |
| 77. | திரிசிராப்பள்ளி | 12-4 | |
| 78. | *திருச்சிற்றம்பலம் | 12-4 | |
| 79. | **திணைநகர்** (43) | 58-3; **64** | 1 |
| 80. | **துருத்தி** (44) | 12-7; 18-1; 46-2; 47-8; **74**; 95-4 | 1 |
| 81. | **துறையூர்** (45) | **13** | 1 |
| 82. | தேங்கூர் | 12-4; 47.6 | |
| 83. | நல்லூர்* | 47-6 | |
| 84. | **நள்ளாறு** (46) | 31-8; 38-4; **68**; 92-9 | 1 |
| 85. | **நறையூர்** (47) | 12-4; 31-6; **93** (சித்தீச்சுரம்) | 1 |
| 86, | **நன்னிலம்** (48) | 12-8; **98** | 1 |
| 87. | **நனிபள்ளி** (49) | 31-8; **97** | 1 |
| 88. | **நாகேச்சுரம்** (50) | **99** | 1 |
| 89. | **நாகை** (காரோணம்) (51) | 31-4 (காரோணம்); 39-7; 46 | 1 |
| 90. | **நாட்டியத்தான்குடி** (52) | **15** | 1 |
| 91. | நாலூர் | 31-6; "நனி நாலிசை நாலூர்" நால் - நான்மறை | |
| 92. | **நாவலூர்** (53) | 3-10; 4-10; 6-10; 13-11; 14-12; 16-11, **17**; 18-10, 19-11, 20-10; 23-10, 24-10, 25-10; 26-10; 33-10; 34-11; 39-11; 40-11; 41-10; 46-11; 50-10; 53-10; 61-11; 62-10; 64-10; 67-11; 68-10; 69-11; 73-11; 76-10; 82-10; 83-10; 84-10; 85-10; 87-10; 88-11; 97-10; 99-11; 100-10 | 1 |
| 93. | **நின்றியூர்** (54) | **19**, 31-5; 47-3; 65 | 2 |
| 94. | **நீடூர்** (55) | **56** | 1 |
| 95. | நெடுங்களம் | 12-8 | |
| 96. | நெய்த்தானம் | 12-7; 31-4; 47-8 | |
| 97. | நெல்லிக்கா | 12-8 | |
| 98. | **நெல்வாயில் அரத்துறை** (56) | **3**; 92-9 | 1 |
| 99. | நெல்வேலி | 39-8 | |
| 100. | பந்தணை நல்லூர் (பந்தையூர்) | 31-1 | |
| 101. | பரங்குன்றம் (57) | **2**; 2(11) | 1 |
| 102. | பரிதிநியமம் | 47-8 | |
| 103. | **பருப்பதம்** (58) | 12-7 திருமலை; 78-6; **79** | 1 |
| 104. | பழனம் | 12-9; 31-1; 47-6; 95-4 | |
| 105. | பழையாறை | 12-5; 31-1; 35-1; (மேற்றளி) | |

* பட்டுக்கோட்டை தாலூக்கா 'திருச்சிற்றம்பலம்' என்னும் ஊரில் உள்ள கல்வெட்டுக்களில் அவ்வூர் 'திருச்சிற்றேமம்' என்று கூறப் பட்டுள்ளதாம். —சிவஸ்தல மஞ்சரி. தலம் எண் 135. பக்கம் 208.

* இத்தலம் 'பாமணி' என வழங்குகின்றது. 'பாம்பணி' - பாமணி என ஆயிற்று.

| | | | |
|---|---|---|---|
| 142. | வெண்பாக்கம் (83) | **89**; [89-10, 11] | 1 |
| 143. | வேள்விக்குடி (84) | **18**; [74] | 1 |

### பல தலங்கள் வரும் பதிகங்கள்

| | |
|---|---|
| இடையாற்றுத் தொகை | **31** |
| ஊர்த் தொகை | **47** |
| திருநாட்டுத் தொகை | **12** |

*சுந்தரரது பாடல்பெற்ற தலங்கள்* 84
*சுந்தரரது தனிப் பதிகம் இல்லாதனவாய் அவருடைய பதிகங்களிற் சொல்லப்பட்ட தேவாரம் பெற்ற தலங்கள் (வைப்புத் தலம் அல்லாதன)* 59

*ஆக* 143

## முற்சேர்க்கை—III

### வைப்புத் தலங்கள்

1. அளப்பூர் — 47-4 *இது தரங்கம்பாடி என்ப.*
2. ஆழியூர் — 12-7 *சிக்கலுக்கும் கீழ்வேளூருக்கும் மத்தியில் உள்ளது.*
3. *இளையான்குடி — 39-1 *பரமகுடிக்கு 7 மைலில் உள்ளது; திருநள்ளாற்றுக்கு 2 மைலிலும் 'இளையான் குடி' என்னும் ஊர் உள்ளது. பெரியபுராண விரிவுரை தொகுதி பக்கம் 547 கீழ்க்குறிப்பு.*
4. *இறைக்காடு — 41-3
5. ஈசனூர் — 31-8. *திருவாரூருக்குத் தென்கிழக்கு 15 மைலில் உள்ள திருவாய்மூருக்குச் சமீபம்*
6. *என்னூர் — 12-6
7. *கச்சையூர் — 31-4
8. கஞ்சாறு — 39-2 *ஆனைதாண்டவபுரம் ஸ்டேஷனுக்கு ½ மைல், மானக்கஞ்சாற நாயனார் ஊர்.*
9. *கடங்களூர் — 31-3
10. *கருப்பூர் — 'இன்கருப்பூர்' 98-3
11. *களந்தை — 39-6 (*களந்தை ஆதித்தேச்சுரம். திருவிசைப்பா*-9) *திருத்தருப்பூண்டிக்கு 9 மைல் தூரத்தில் உள்ள திருக்களருக்குத் தென் மேற்கு 2 மைல்.*
12. காட்டூர் — 47-1 *திருவாரூரிலிருந்து 3 மைல். மதுராந்தகத்துக்கு அருகிலும் ஒரு காட்டூர் (திருவள்ளீச்சுரம்) உள்ளது.*

13. *காரிக்கரை 31-3 சென்னையிலிருந்து நாகலாபுரம் அடைந்து அங்கிருந்து 2½ மைல்; பைரவர் சந்நிதி விசேஷம்.
14. *காவம் 31-4
15. *கிழையம் 12-5
16 *கிள்ளிகுடி "அரனூர்க்கிடம் கிள்ளிகுடி" 12-7
17. *கீழை 12-5, 7 'நாட்டுக்கெல்லாம் மணியாகிய கீழை; கடைமுடி' என்னும் தேவாரம் பெற்ற தலம் கீழையூர் என வழங்குகிறது. சிவஸ்தல மஞ்சரியில் 67-ஆம் தலம் பார்க்க.
18. குண்டையூர் குரக்கினங்கள் குதிகொள் குண்டையூர் 20-8
குரவமரும் பொழில்சூழ் குண்டையூர் 20-6
கொல்லைவளம் புறவிற் குண்டையூர் 20-4
கோதில் பொழில்புடைசூழ் குண்டையூர் 20-3
19. *குரக்குத்தளி 47-2. திருப்பூருக்குக் கிழக்கு 5 மைல்; 'கூனிப்பாளையம்' ஸ்டேஷனுக்கு 2 மைல்; "கொங்கிற் குறும்பிற் குரக்குத் தளியாய்."
20. *குருக்கேத்திரம் 78-6
21. *குன்றையூர் "விரிபொழில்சூழ் குன்றை" 39-1. இது "திருச்செங்குன்றூர்"; மலைநாட்டில் கொல்லத்துக்கு வடகிழக்கு 58 மைல்; நம்மாழ்வாரின் பாடல் பெற்ற விஷ்ணு ஸ்தலம்; மூவாயிரவர் வாழ்ந்த இடம்.
22. *கைம்மை 12-6
23. கொண்டல் (கொண்டல் நாட்டுக் கொண்டல்) 12-2; சீகாழிக்கு மேற்கு 3½ மைல் முருகவேளுக்குரிய ஸ்தலம்.
24. கோத்திட்டை 2-1, 17-6; இது விற்குடி வீரட்டமோ தெரியவில்லை. அப்பர் தேவாரம் 6-71-2 பார்க்கவும். விற்குடி ரெயில் ஸ்டேஷனிலிருந்து 3 மைல்.
25. நக்களூர் 12-1 திருநள்ளாற்றிலிருந்து 1 மைல்.
26. *தகடூர் (தகட்டூர்) 12-1 திருத்தருப்பூண்டியிலிருந்து 10 மைல். பைரவர் சந்நிதி விசேஷம்.
27. *தஞ்சாக்கை 12-9
28. தஞ்சை 12-9 (மருகல் நாட்டுத் தஞ்சாவூர்) 39-9 "தஞ்சை மன்னவனும் செருத்துணை." செருத்துணை நாயனாரின் ஊர். இது திருமருகலிலிருந்து தென்கிழக்கு 4 மைல். நன்னிலம் ஸ்டேஷனிலிருந்து மருகல் 7½ மைல்.
29. *தண்டங்குறை 12-2 பசுபதி கோயில் ஸ்டேஷனிலிருந்து 2 மைல்.
30. *தண்டந்தோட்டம் 12-2. கும்பகோணத்துக்கு 7 மைல் தூரத்தில் உள்ள பேணு பெருந்துறையிலிருந்து 2 மைல்.

31. தண்டலை 12-2. இது தண்டலை நீணெறியாயிருக்கலாம். திருத்தருப்பூண்டியிலிருந்து 2½ மைல்.

32. *தாரையூர் 12-1

33. தீங்களூர் 31-6. திருவையாற்றுக்கு அருகில் உள்ள திருப்பழனத்திலிருந்து 1 மைல்.

34. *திருவாதிரையான் பட்டினம் (இது 'காவிரிப்பூம்பட்டினம் போலும்') 31-6.

35. *தெள்ளாறு 92-9; திண்டிவனம்-வந்தவாசி வழியில் உள்ளது.

36. *தென்னூர் 12-6 திரிசிராப்பள்ளிக்கு அருகில் உள்ளது.

37. *தேசனூர் 31-8

38. *தேவனூர் 12-6 "எங்கள் பிரான் உறையும் திருத்தேவனூர்." செஞ்சிக்கு வடகிழக்கு 5 மைல். திருக்கோவலூருக்கு 2 மைலிலும் பின்னும் சில இடங்களிலும் தேவனூர் என்னும் ஊர் இருக்கின்றது.

39. *தேறனூர் 31-9

40. *நாங்கூர் (நாங்கூர் நாட்டு நாங்கூர்); சீகாழியிலிருந்து 6 மைல். திருவிசைப்பாச் சேந்தனார் ஊர். "பரஞ்சோதி பயிலும் ஊர் நாங்கூர்" 12-4, 47-6

41. *நாலனூர் 12-3

42. *நிறைக்காடு 47-3

43. *நிறையனூர் 31-5

44. *நின்றவூர் 39-11 (தின்னனூர்; பூசலார் நாயனார் ஊர். ரெயில் ஸ்டேஷன்; சென்னை அரக்கோணம் மார்க்கத்தில் உள்ளது.

45. *பந்தையூர் 31-1 "இது பந்தணை நல்லூராய் இருக்கலாம். திருவிடை மருதூருக்கு அருகில் உள்ளது.

46. *பன்னூர் 12-6

47. *பாங்கூர் 12-4, 47-6

48. *பாசனூர் 31-8

49. *பிடவூர் 96-6 திருப்பதட்டூர் என வழங்கும்; திரிசிராப்பள்ளி ஜில்லா துறையூருக்குக் கிழக்கு 12 மைல் தூரம்; மாசாத்தனார் கோயில் கிலமாயுளது.

50. *புரிசை "புரிசை நாட்டுப் புரிசை" 12-6; காஞ்சிபுரத்துக்கு அருகில் உள்ளது.

51. *பூங்கூர் 12-4

52. *பெருமூர் பிறையனூர் பெருமூர் 31-5

53. பேரூர் (மேலைச்சிதம்பரம்) கோயமுத்தூரிலிருந்து 3 மைல். "குடகத்தில்லை அம்பலவாணனின்றாடல் விரும்புமிடம்" 10-2 "பேரூர் என உறைவான்" 82-10 "பேரூர் உறைவாய் பட்டிப்பெருமான் பிறவா நெறி

| | | |
|---|---|---|
| | | யானே" 47-4; "மீகொங்கில் அணி காஞ்சிவாய்ப் பேரூர்" 90-10 |
| 54. | *பேறனூர் | 31-9 |
| 55. | பொன்னூர் | 12-6 "பொன்னூர் நாட்டுப் பொன்னூர்", திரு அன்னியூர் என்னும் ஸ்தலம் 'பொன்னூர்' என வழங்குகின்றது. திருஅன்னியூர் மாயூரத்துக்கு அடுத்த திருநீடூருக்கு மேற்கு 3 மைல். |
| 56. | **மங்கை | (மங்கலம்) "அலைமலிந்த புனல் மங்கை ஆனாயர்" 39-2 *ஆனாய நாயனார் ஊர்; லால்குடிக்கு அருகில் உள்ள பூவாளூருக்கு 1 மைல் தூரத்தில் உள்ளது. |
| 57. | *மறையனூர் | 31-5 |
| 58. | மாகாளம் | 47-5; கீழ்வேளூருக்கு $3\frac{1}{2}$ மைல் |
| 59. | மாட்டூர் | 47-1 இது மாயூரத்துக்கு அருகில் உள்ள 'சேவூர்' அவிநாசிக்கு மேற்கு 5 மைலிலும் 'சேவூர்' என்னும் ஊர் உளது. |
| 60. | மிழலை | 12-5; மிழலை நாட்டு மிழலை" 39-4 (பெருமிழலை) - "வெண்ணி நாட்டு மிழலை; இவை சோழநாட்டுத் திருவீழிமிழலை அல்ல போலும். |
| 61. | *மிறைக்காடு | 47-3 |
| 62. | *மூலனூர் | 12-3 |
| 63. | *வடபேறூர் | 31-4 |
| 64. | *வரிஞ்சை | 39-7 "கழற் சத்தி வரிஞ்சையர் கோன்"; கீழ் வேளூர் ஸ்டேஷனிலிருந்து 5 மைல்; சத்தி நாயனாரின் ஊர். |
| 65. | *விடங்களூர் | 31-3 |
| 66. | *விளத்தூர் | 12-8 "விளத்தூர் நாட்டு விளத்தூர்" |
| 67. | *வெள்ளாறு | 38-4 |
| 68. | *வெற்றியூர் | 12-3; ஜயபுரி என வழங்கும்; திருஆடானையிலிருந்து 8 மைல். திருஆடானை தேவகோட்டையிலிருந்து 25 மைல். |
| 69. | வேங்கூர் | 47-6 |
| 70. | *வேலனூர் | 12-3 |
| 71. | *வேளூர் | "வேளார் நாட்டு வேளூர்" 12-8 |

** பெரியபுராண விரிவுரை ஆனாய நாயனார் புராணம்: தொகுதி-2 பக்கம் 1239.

* பெரியபுராண விரிவுரை, வைப்புத்தல விளக்கம் முதலிய நூல்களிற் கிடைத்த விவரங்கள்.

# முற்சேர்க்கை—IV

## ஒப்புமைப் பகுதி

**1-1 பித்தா பிறை சூடி**
*பித்தா பிறைசூடி* —சம்பந்தர் 1-89-3

**1-6 தழல் போலும் திருமேனி**
*எரிபோலு மேனியன்* —சம்பந்தர் 2-25-9
*எரிபோல் மேனிப் பிரான்* —அப்பர் 9-3

**2-1 சோத்திட்டு விண்ணோர்...தொழ**
*சோத்தெம் பிரானென்று சொல்லிச் சொல்லி* —திருவாசகம் 9-8

[67-4; 92-6 பார்க்க.]

**2-1 திசை திசையன**
*சேவிக்க வந்தயன் இந்திரன்...மால் எங்கும் திசைதிசையன கூவி* —திருப்பல்லாண்டு 6

**,, தோல் புடைசூழ்ந் தார்த்திட்டதும் பாம்பு**
*புலித்தோலொடு பந்தித்த நாகத்தன்* —சம்பந்தர் 3-125-7
*புலியதள் அரவரை ஆர்த்தவன்* —சம்பந்தர் 1-120-2

[4-1 பார்க்க.]

**2-2 முண்டம் தரித்தீர்**
*முண்டத்திற் பொலிந்திலங்கு மேனியானே* —அப்பர் 6-4-3
*முண்டதர* —சம்பந்தர் 3-68-10
*முண்டநன் மேனியர்* ஷை 2-104-10

**,, பாம்பைக் கண்டத்திலும் தோளிலும் கட்டி வைத்தீர்**
*தோளின் மிசை வரி அரவம் வீக்கி* —சம்பந்தர் 3-70-3
*அரவாரம் பூண்டான்* —சம்பந்தர் 1-30-9

**2-4 பஞ்சுண்ட அல்குல்**
*பஞ்சுசூழ் பரவை அல்குல்* —சிந்தாமணி 840
(பஞ்சு - ஆகுபெயர்; பஞ்சாலாகிய துகில்)

**,, பணைமென் முலையாளொடு நீரும் ஒன்ருய் இருத்தல் ஒழியீர்**
*அரிவையொடு பிரிவிலி* —சம்பந்தர் 3-75-10

**,, கைநாகம் அதற்கு அஞ்சுண்டு படம்**
*அஞ்சு கொலாம் அவர் ஆடரவின்படம்* —அப்பர் 4-18-5

**2-5 பேயொடு பூச்சொழியீர்**
(பூச்சு - இதமான செயல், சொல்)
*மற்ரோர் பூச்சிலை* 14-4
*இணங்குவர் பேய்களொடும்* —சம்பந்தர் 3-16-1

,, **புலால் வாயன பேய்**
*பேய்மகள் நிணம்தின் வாயள்* —திருமுருகா 51-56
*பிணந்தின் யாக்கை பேய்மகள்* —பட்டினப்பாலை 260

2-6 **படுகாட்டகத் தென்றும்ஓர் பற்றெழியீர்**
*மயானம் புரிந்தனை மகிழ்ந்தனை* —சம்பந்தர் 2-30-3
*வெள்ளில் முதுகானிற் பற்றவன்* —சம்பந்தர் 3-81-6

2-7 **சிங்கத்துரி மூடுதிர்**
*சிங்கமும்...அலறப் பிளந்தீர் உரி போர்த்ததென்னே* 99-6
*அரியொடு, கைம்மாவை, புலியை யுரியா மிசை போர்வை*
*உடுக்கையென* —கந்தபுரா: காமதகன 32
*தோல் சீயத்தொடு ஏகாசர்* —திருப்புகழ் 554
*சிங்கப் பசுந்தோல்கொடேகாசம் இட்டும்* —தக்கயாக 551

3-2 **பொறிவாயில் ஐந்தினையும் அவிய**
*பொறிவாயில் ஐந்தவித்தான்* —திருக்குறள் 6

,, **கறிமா மிளகு**
*கறிக்கொடிக் கருந்துணர்* —திருமுருகா 309

3-3 **பிறவிக் கடல் நீந்தி**
*பிறவிப்பெருங் கடல் நீந்துவர்* —திருக்குறள் 10

3-4 **ஓடுபுனற் கரையாம் இளமை**
*பெருக்காற்று இடிகரை ஒத்தது இளமை - [என்ரூர் பிறரும்]*
*ஆற்றங்கரை மரமாய் வேர் உறுவேனை* —திருவாச - நீத்தல் 3
*ஆறோடு வெள்ளத் ததன்கரை உற்ற அடிமரம் போல்*
—திருமுல்லை வாயில் வைணவி எண்ணெத்து மாலை 37
*ஆற்றங்கரையின் மரமும்...விழுமன்றே* —நல்வழி 13

,, **உறங்கி விழித்தால் ஒக்கும் இப் பிறவி**
*உறங்கி விழிப்பது போலும் பிறப்பு* —திருக்குறள் 339

3-7 **அகரமுதலின் எழுத்தாகி நின்ருய்**
*அகரமுதல எழுத்தெல்லாம் ஆதி*
*பகவன் முதற்றே உலகு* —திருக்குறள் 1
*அகர வுயிர்போல் அறிவாகி எங்கும்*
*நிகரில் இறை நிற்கும் நிறைந்து* —திருவருட்பயன் 1

,, **மணக் கோலமதே பிணக்கோல மதாம்**

[8-6 *பார்க்க.*]

*மணமகனே பிணமகனாய் மணப்பறையே பிணப்பறையாய்*
—திருவிளை - பழியஞ்சி 40
*மணப்பறை யாயின...பிணப் பறையாய்* —நாலடி 3-3

3-9 வானுர் நுதலார் வலைப்பட் டடியேன் பலவின்கனி யீந்தது போல்வதன்முன்
*கொங்கைப் பலாப் பழத்தீ* —திருவாச 6-46
*கைப்பழம் இழந்த மந்தி கட்டியங்காரன் ஒத்தது*—சிந்தாமணி 2726

[*விசேடக்குறிப்பு பக்கம்* 227 *பார்க்க.*]

4-1 தலைக்குத் தலைமாலை யணிந்த தென்னே
*தலைமாலை தலைக்கணிந்து* —அப்பர் 4-9-1

[57-1 *பார்க்க.*]

,, புலித்தோல் அதன்மேற் கதநாகக் கச்சு ஆர்த்தது

[2-1 *பார்க்க.*]

*எழிலார் நாகம் புலியின் உடைமேல் இசைத்து* —சம்பந்தர் 1-71-7

,, மலைக்கு நிகரொப்பன வன்திரைகள்
*மலைக்குவ டெனத்திரை* —சம்பந்தர் 3-76-1
*மால் வரைபோல் திரைகள்* 4-3

[4-3 *பாடலில் பார்க்க.*]

4-2 பிடித்தாட்டியோர் நாகத்தை
*பற்றிவாளர வாட்டும் பரிசரே* —சம்பந்தர் 3-114-4
*பாம்பும் ஆட்டுவர் பாசூரடிகளே* —அப்பர் 5-25-9

4-3 மால்வரைபோல் திரைகள்

[4-1 *பார்க்க.*]

,, சிந்தித் தெழுவார்க்கு நெல்லிக் கனியே
*அங்கை நெல்லியின் பழத்திடை அமுதே* 54-3
*நெல்லிக் கனியைத் தேனைப் பாலை* —திருவாச 27-4
*தடக்கையில் நெல்லிக் கனியெனக் காயினன்* —திருவாச 3-162

,, எழுத்துக்கு உயிரே ஒத்தியால்
*எழுத்தி னவ்வுயி ரென்ன நிறைந்தளாய்*
—தணிகைப் பதிற்றுப்பத்து 1

,, பயிர்க்கோர் புயலே
*பயிரின் வாட்டம் தீர்க்கும் துளியானை* —அப்பர் 6-66-9
*பயிர் வளர்க்கும் துளியவன் காண், துளியில் நின்ற நீரவன் காண்*
—அப்பர் 6-87-6

4-5 விடை ஏறுவதென் மதயானை நிற்க
*கடகரியும் பரிமாவும் தேரும் உகந்தேருதே*
*இடபமுகந் தேறியவா றெனக்கறிய இயம்பேடீ* —திருவாச 12-15

[44 - 2 பார்க்க.]

,, கூடு மலைமங்கை ஒருத்தியுடன் சடைமேற் கங்கை யாளைநீ
சூடிற்றென்னே
*மங்கை உமைபாகமுமாக இதென் கொல் கங்கை*
*சடைமேல் அடைவித்த கருத்தே* —சம்பந்தர் 2-37-2

4-6 இரவத் திடுகாட் டெரியாடிற் றென்னே
*எரியாட லென்னே* —சம்பந்தர் 1-48-3
*இருள் எரியேந்தி மாநடம் ஆடல் மேயதென்* —சம்பந்தர் 2-50-11

4-7 சொல்லுவார் சொற்பொருளவைநீ
*சொல்லும் பொருளெலாம் ஆனார் தாமே* —அப்பர் 6-78-5

[63-8 பார்கக.]

,, ஆக்கும் அழிவும் நீ
*உலகமெல்லாம் வைப்பானைக் களைவானை வருவிப்பானை*
—அப்பர் 6-26-4

4-8 விளங்கும் குழைக் காதுடை வேதியனே
*வேதியனே விளங்குங்குழைக் காதுடையாய்* 26-3
*விளங்குங் குழைக் காதுடையாய்* 28-8

4-9 நொடிக்கும் அளவிற் புரமூன் றெரியச் சிலை தொட்டவனே
*மும்மதிலும் நொடியளவிற் பொடிசெய்த முதல்வன்*
—சம்பந்தர் 1-131-4

,, பிடிக்கும் களிறே ஒத்தியால்
*வாரிமத களிறே போல்வான் கண்டாய்* —அப்பர் 6-23-5

4-10 *‘மந்தம் முழவு’
*மந்த முழவோசை* —பெரிய திருமொழி 5-10-7

,, தடுமாற்று (*தடுமாற்றம்*)
*தண்ணீர் பெறாஅத் தடுமாற்று* —கலித்தொகை 6

5-1 ஐவர் கொண்டிங் காட்ட ஆடி
*ஐவர் நின்று ஒன்றல் ஒட்டார்* —சம்பந்தர் 1-50-7
*ஓரொட்டார் ஒன்றை உன்ன ஒட்டார், மலரிட்டுனதாள்*
*சேரொட்டார் ஐவர்* —கந்தரலங் 4

,, காணம் (*பழங்காசு*)
*பைம்பொனொடு காணம்,*
*நலங்கிளர் காணமும் மணியும் நன்பொனும்*
—சிந்தாமணி 591, 2410

---

* *மந்த ஓசை - தக்கயாக - 33 ‘விசேடக்குறிப்பு’. சிந்தாமணி படுத்தல் ஓசை - 735 உரை.*

**5-2 கணபதியேல் வயிறுதாரி**
*பெருவயிறும் குறியதாளும்* —வீரவனப்புராணம்
*எப்பயறும் எக்கனியும் எக்கிழங்கும் எத்தேனும்*
*தொப்பையொடு பெருவயிற்றுப் பிள்ளைக்குச்*
*சுமத்துதியே.* —தக்கயாக 229
**5-4 பல்லை யுக்க படுதலையிற்...பலி**
*பல்லில் வெண்டலையிற்பலி* —சம்பந்தர் 2-97-6
**" பகலெலாம் போய்ப்பலி திரிந்து**
*பகலே பலி என்று வந்து* —சம்பந்தர் 1-104-3
**5-6 தடமார்பு நீங்காத் தையலாள்**
*பேதை தடமார்பதிடமாக உறைகின்ற பெருமான்*
—சம்பந்தர் 3-70-4
*"மெல்லியலை மல்லல் தன்னிறம் ஒன்றில்*
*இருத்தி நின்றோன்* —திருக்கோவையார் 58
*"பங்கன் அகலத்து இறைவி"* —தக்கயாக 292
**5-7 பொய்ம்மையாலே போதுபோக்கி**
*பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்*
—திருவாசகம் - பிடித்தபத்து 37-3
**5-8 சிலை அமைத்த சிந்தை**
*"நெஞ்சக் கனகல்"* —கந்த. அநு. காப்பு

[67-5 *பார்க்க.*]

**6-1 அடங்கலார் ஊர் எரியச்சீறி அன்று மூவர்க்கருள் புரிந்தீர்**
*"மூவார் புரங்கள் எரித்த அன்று மூவர்க்கருள் செய்தார்"*
—சம்பந்தர் 1-69-1
**" மனைகள் தோறும் தலை கையேந்தி விடங்கராகி**
*"பலிதேர்ந்துழலும் விடங்க வேடச் சின்னத்தினால்"*
—அப்பர் 4-81-9
**6-4 பண்ணுளீராய்ப் பாட்டும் ஆனீர்**

[62-3 *பார்க்க.*]

*"பாட்டிற் பண்ணாய்"* —அப்பர் 6-15-1
**7-1 செத்த போதில் யாரும் இல்லை**
*செத்தால் வந்துதவுவார் ஒருவர் இல்லை* —அப்பர் 6-62-1
**7-4 மூவராயும் இருவராயும் முதல்வன் அவனேயாம்**
*மூவரென இருவரென முக்கண்ணுடை மூர்த்தி* 80-9
**8-2 ஒருபொருள் இலாத மாயம் (பிறவி)**
*சொல்லிற் றொன்றாகச் சொல்லார்* 8-3
*பேசப் பொருளலாப் பிறவிதன்னை* —அப்பர் 6-42-7

8-3 [8-2 பார்க்க.]
சொல்லிடில் எல்லை இல்லை 8-4
8-4 **மாடநீடு மருங்கு ஆரூர்**
திருந்து மாடங்கள் சூழ்...திரு ஆரூர் —சம்பந்தர் 3-45-5
,, [8-3 பார்க்க.]
8-4 **அல்லி வண்டியங்கும் ஆரூர்**
நல்ல அல்லி மலர்க்கழனி ஆரூர்; மலர்மோந்து வண்டுபாடும்
—சம்பந்தர் 1-105, 11; 1-87-3
8-6 **பிறவியை வேண்டேன் நாயேன்**
'வேண்டேன் பிறப்பிறப்பு' —திருவாச 34-7
'பிறவாமைவேண்டும்' —பெரியபுராணம், காரைக்கால் 60
,, **மணமென மகிழ்வர் முன்னே பிணமெனச் சுடுவர் பேர்த்தே**

[3-7 பார்க்க.]

8-7 **தாழ்வெனும் தன்மை விட்டு**
தாழ்வெனும் தன்மையோடும் சைவமாம் சமயம்
சாரும் ஊழ் பெறல் அரிது —சித்தியார் சுபக்கம் 181
8-7 **தனத்தையே மனத்தில் வைத்து வாழ்வதே கருதி**
**மறுமைக்கொன்று ஈயகில்லார் ஆழ்குழிப்பட்ட போது**
காசு தேடி ஈயாமல் வாழப்பெறுவோரும்...மா காலன்
ஊர்புக் கலைவாரே திருப்புகழ் 1031
ஏதும் இத்தனை தானம் இடாதவர்...
ஏழ்நரகுழல்வாரே —திருப்புகழ் 1149
,, **அலக்கணில் ஒருவர்க்கு ஆவர்**
*[ஆவர் - யாவர்]
ஆவர் இவை செய்தறிவார் (ஆவர் - யாவர்)
—பெரிய திருமொழி 3-3-7
,, **யாழ் முயன்றிருக்கும் அப்பனே**
பண்ணில் யாழினர் —சம்பந்தர் 3-112-4
யாழின திசையுடை இறைவர் ஷை 3-15-4
பண்ணொடியாழ் வீணை பயின்றாய் போற்றி —அப்பர் 6-57-7
தங் கையின் யாழும் வைத்தார் —அப்பர் 4-30-1
8-10 **தடமுலைக்கண் அஞ்சொலார் பயிலும் ஆரூர்**
பணைந்த கொங்கை அஞ்சொலார் அரங்கெடுக்கும்
அந்தண் ஆரூர் —சம்பந்தர் 2-101-4

---

* யாழ் ஆழ் என வருதல் காண்க. 59-5 பார்க்க.

**9-3 தரிக்குந் தரைநீர் தழல்காற் றந்தரம் சந்திரன் சவிதா இயமானன் ஆவீர்**

இருநிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய் எறியும்
காற்றுமாகி, அருநிலைய திங்களாய் ஞாயிறாகி ஆகாச
மாயட்ட மூர்த்தி யாகி —அப்பர் 6-94-1

"மண்ணொடு நீர் அனல் காலோ டாகாயம் மதியிரவி,
எண்ணில் வரும் இயமானன்" —சம்பந்தர் 2-48-3

நிலனும் விசும்பாம் நிமிர் கால் நீர் தீயாம்
அலர் கதிராம் வாண்மதியாம் அன்றி—மலர்கொன்றை
ஒண்ணறுந் தாரான் ஒருவனிய மானனுமாய்
எண்ணிறந்த எப்பொருளு மாம் —தண்டியலங்-அவநுதியணி

[27 - 8 பார்க்க.]

**9-6 அந்தணன்... அவனுக்கு... காசினை கைபுகச் செய்துகந்தீர்**

அலந்த அடியான் அற்றைக் கன்றோர் காசெய்திப்...
போற்றும் புத்தூர் —சம்பந்தர் 2-63-7

**9-8 பறைக்கண் நெடும்பேய்**

பறைக்கண் பேய்மகள் —சிலப். 26-208
பறைபோல் விழிகட்பேய் —காரைக். மூத்த திருப்பதிகம் 2-1
—சம்பந்தர் 1-67-3

**9-9 மழைக்கண்**

சிதரரி மழைக்கண் —பெருங்கதை 1-35-186

**9-10 காளகூடம் ஒடிக்கும் உலகங்களை என்றதனை உமக்கே அமுதாக உண்டீர் உமிழ்**

ஆலாலம் உண்டிலனேல் அன்றயன்மால் உள்ளிட்ட
மேலாய தேவரெல்லாம் வீடுவர் காண் சாழலோ
—திருவாச 12-8

சிற்றுயிர்க் கிரங்கிக் காய்சின ஆலம் உண்டாய்
அமுதுண்ணக் கடையவனே —திருவாச 6-50

**10-2 பகுவாயன பேய்**

பகுவாய பேய்கள் —காரைக் - மூத்த திருப். 2-8

**" ஓரியிட....ஆடல்**

நரிகதிக்க எரியேந்தி ஆடும் —சம்பந்தர் 3-101-1
ஓரி கதித்தெங்கும் பிட்க நட்டம் காரை - மூத்த திருப் 2-3

[72 - 7 பார்க்க.]

**" கூறுநடை... பேய்**

பாறுகாற் பேய் —காரை - மூத்ததிருப் 1-6
'பாறுகால்' —தக்கயாக 123
(பாறுகாலால் செயும் நடை எனக் கூறக்கூடிய நடை)

,, குழிகட் பேய்
குழிவிழிகண் பல்பேய் —அப்பர் 6-51-7

10-3 குயில் கூவும் இடம் மயில் ஆலும் இடம்
[(i) 30-6 பார்க்க.]
(ii) குயில் கூவமயில் ஆலும் ஆரூரரை அப்பர் 4-5-1

10-5 சித்தம் ஒருநெறி வைத்த
ஒரு நெறிய மனம் வைத்துணர் —சம்பந்தர் 1-1-11

10-9 *தளவேல் நகை யாட விரா....நட்டம் நின்றுடி
வரைமகளோ டுடனுடிதிர் —சம்பந்தர் 3-124-2
சிவமாடச் சத்தியும் ஆட —திருமந்திரம் 2791
இடங்கொண்ட சத்தியும் எந்தை பிரானும்
நடங்கொண்டு நின்றமை ஷை 2768
சதாசிவம் தானுட...சிவசத்தி தானுட ஷை 2789

11-3 †புள்ளுவராகும் அவர்க்கவர் தாமும் புள்ளுவனர்
வஞ்சனை செய்வார்க் கென்றும் வஞ்சனுகும் —அப்பர் 6-86-4
பொய்ந்நம்பி புள்ளுவன் கள்வம் —பெரியதிருமொழி 10-7-4

12-5 மழலை ஏற்று மணாளன்
மழலைவெ ளேற்றினர் —சம்பந்தர் 3-85-5
[72 - 3 பார்க்க.]

13. வேண்டிக் கொள்வேன் தவநெறியே
தவநெறி அருள் எமக்கே —சம்பந்தர் 3-3-3

13-6 கொட்டாட்டொடு பாட்டொலி
பதினேராடலும் பாட்டும் கொட்டும் —சிலப். 3,14
கொட்டாட்டும் பாட்டுப் பூ சாந்தம் —தக்கயாக 114 உரை
[30 - 3 பார்க்க.]

13-7 மாதரார் மயில் (மாது - அழகு)
மாது மயில் —சம்பந்தர் 3-68-6

13-10 ‡மாவாய்ப் பிளந்தானும்
மேவார் விடுத்தந்த கூந்தற் குதிரையை வாய் பகுத்திட்டு
—கலித்தொகை 103
கூந்தல் வாய் கீண்டானை
—திவ். பிர. இயற்பா 2 ஆம் திருஅந்தாதி 93
கூந்தல் எரிசினம் கொன்றோய் —பரிபா ௯ - 31, 32
துரங்கன் வாய் பிளந்தானும் 87-7

---

* தளவேல் நகையாள் தவிரா மிகுசீர் மங்கை (எனவும் பிரியும்).
† புள்ளுவர் - வஞ்சகர்.
‡ கேசி - குதிரையாய் வந்து பொருத அசுரன்.

**14-1 வைத்தனன் தனக்கே தலையும் என் நாவும் நெஞ்சமும்**

*வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும், தாழ்த்தச்*
*சென்னியும் தந்த தலைவனை* —அப்பர் 5-90-7

*யாம் ஓதிய கல்வியும் எம்அறிவும், தாமே பெற*
*வேலவர் தந்ததனால்* கந். அநு. 17

*என்னை நன்றாக இறைவன் படைத்தனன், தன்னை*
*நன்றாகத் தமிழ்ச்செய்யு மாறே* —திருமந்திரம் 81

**14-3 உற்றபோ தல்லால் உறுதியை உணரேன்**

*உற்றலால் கயவர் தேறார் என்னும்*
*கட்டுரையோ டொத்தேன்* —அப்பர் 4-31-8

**,, அற்றவர்க் கருள்செய்... அடிகள்**

*அற்றவர்கள் நற்றுணைவன்* —சம்பந்தர் 3-68-2

**14-9 இழைத்த நாள் கடவார்**

*இழைத்த நாள் எல்லை கடப்ப தென்றால்* —அப்பர் 6-31-5

**,, பிழைத்தது பொறுத்தொன் றீகிலராகில்**

*பிழைத்த தெலாம் பொறுத்தருள் செய் பெரியோய்*
—அப்பர் 6-31-5

**15-2 துச்சேன்**

*துச்சான செய்திடினும்* —திருவிசைப்பா 21-1

**16-1 குரும்பை முலை**

*குரும்பையும் இகலி உருத்தெழு மென்முலை*
—பெருங்கதை க-௩௩-182-3

**16-5 நிற்பான் (திருமால்)**

'*நின்ற நெடுமாலும்*' (உலகளக்க நிமிர்ந்து நின்றவர்)
—சம்பந்தர் 2-34-9

**16-6 திரைபொருது வருபுனல் சேர் அரிசில்**

*திரைபொரு புனல் அரிசில்* —சம்பந்தர் 1-125-3

**,, பெருந்தேவர் பிடரியச் செற்று.... அருள் பெருகு சிவபெருமான்**

*நாயகனே தண்டித்தனல் சயமன்றோ வானவர்க்கு* —திருவாச 12-4

**16-9 கரும்பு(ன்)னை வெண்முத்தரும்பிப் பொன்மலர்ந்து பவளக் கவின் காட்டும்**

ஒளிகொள் வெள்ளி மடலிடைப் பவளமும் முத்தமும்
தொத்து வண்புன்னை —சம்பந்தர் 3-89-8

வெண்முத் தரும்பிப், பசும்பொன் மலர்ந்து, கடைந்த செம்
பவளத் தொத்துடன் காட்டும் புன்னை —கல்லாடம் 36

புன்னை முத்தரும்பிச் செம்பொன் காட்ட
—பெரியதிருமொழி 2-10-3

நெடுங்காற் புன்னை நித்திலம் வைப்பவும் —சிறுபாண்-149

**,, கரும்பு(ன்)னை**

'கருங்கோட்டுப் புன்னை' —குறுந்தொகை 123
—கல்லாடம் 36, 69

**17-8 தீயாடியார்**

'அனலாடினாய்' —அப்பர் 6-99-2

**18-3 பேர் ஆயிரம் [44-7, 56-11 பார்க்க.]**

**18-5 உண்பதோர் ஊணிலர் ஊரிடு பிச்சையல்லால்**

(ஓடேகலன்) உண்பதும் ஊரிடு பிச்சை —சம்பந்தர் 1-32-1

**18-7 என்னைப் பெற்ற முற்றவை தம்மனை தந்தைக்கும் தவ்வைக்கும் தம்பிரானார்**

எந்தை தந்தை தந்தையெங் கூட்ட மெல்லாம்
தம்பிரானீரே —பெரியபுரா - ஏயர்,392

'எந்தை எந்தாய் சுற்றம் முற்றும்...எம்பிரான்'
—திருப் பல்லாண்டு 13

[57-7 பார்க்க.]

**19-2 வாசத்தினார் மலர்க் கொன்றை யுள்ளார்**

நறுங்கொன்றைப் போதி னுள்ளான் —அப்பர் 6-8-5

**19-8 *ஆறும் அன்பர் இட்டுகந்தார் மலர்ப்பூசை**

எல்லிற் கங்குற் பொழுதறு காலத் தென்றும் பூசனை
விடாது செய்து —திருவிளை-கடவுள் வாழ்த்து 21

**19-10 வாயார் நினைக்கும் அவருக்கு**

'வாக்கினுள்ளான், 'வாயானை மனத்தானை' —அப்பர் 6-8-5; 6-19-8

---

* ஆறும் - ஆறு காலமும்.

**21-1 வந்தாய் போயறியாய் மனமே புகுந்து நின்ற சிந்தாய்**

[28-5 பார்க்க.]

*நெஞ்சினில் அஞ்சிலம் பலேக்கும் பொற்றிருவடி என்*
*குடிமுழுதாளப் புகுந்தன போந்தன இல்லே*
—திருவிசைப்பா 16-2

*வந்தாய் என் மனத்தே வந்து நீ புகுந்த பின்னே*
*எந்தாய் போயறியாய்* —பெரிய திருமொழி 8-9-5

*பொய்யா தென்னுயிருட் புகுந்தாயின்னம் போந்தறியாய்* 28-5

**21-2 பிறவாமை கேட்டொழிந்தேன்**

*வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை* —திருக்குறள் 362

*பிறவாமை வேண்டும்* —பெரியபுரா. காரைக் - 60

[8-6 பார்க்க.]

**21-3 நினேயாதிருந்தாலும் வேரு வந்தென்னுள்ளம் புகவல்ல மெய்ப்பொருளே!**

*நினேயா என்னெஞ்சை நினேவித்தானே* —அப்பர் 6-43-1

**21-5 எம்மான் எம்மனே**

**எம்மான் எம்மனே* 24-3

**21-6 †நானேல் உன்னடியே நினேந்தேன்**

*யானேல் எம்மான்தன் அடித்தொடர்வான் உழிதர்கின்றேன்*
—அப்பர் 6-27-1

**22-1 சென்னியில் எங்கள் பிரான்**

*சிந்தை யிடையார் தலேயின் மிசையார்* —சம்பந்தர் 2-60-1

**22-3 அடிக்கு ஆட்பட்ட தூளிகொண்டு சூடுமின் தொண்டருள்ளீர்**

*திருப்புகழ் வல்லவர் சீர்பாத தூளிஎன் சென்னியதே*
—திருப்புகழ் சிறப்புப்பாயிரம்

**23-1 மாமதியும் அரவும் உடன் ‡துயிலும் வடிவே**

*திருத்துயில் பெற்ற மார்பன்* —சிந்தா-1504

*பாம்பொடு திங்கள் பகைதீர்த் தாண்டாய்* —அப்பர் 6-99-2

[38-3, 76-5 பார்க்க.]

---

* எம்மான் - எம்தந்தை. † ஏல் - அசை. ‡ துயிலுதல் - தங்குதல்.

**23-2 எங்கேனும் இருந்துன் அடியேன் உனைநினைந்தால்**
**அங்கேவந் தென்னொடும் உடனாகி நின்றருளி**

*செங்கோடைக் குமரனென எங்கே நினைப்பினும் அங்கே*
*என்முன்வந் தெதிர் நிற்பனே* —கந். அலங் - 104

**23-5 உகப்பாய் முனிந்தருளித் தெழிப்பாய் மோதுவிப்பாய்**

*நின்பணி பிழைக்கிற் புளியம் வளாரால் மோதுவிப்பாய்,*
*உகப்பாய், முனிவாய்* —அப்பர் 4-99-1

**23-10 பழிசேரில் புகழான்**

*புகழல திகழ்பழி யிலரே* —சம்பந்தர் 2-91-1

**24. மழபாடியுள் மாணிக்கமே**

*மழபாடி வயிரத் தூணே* —அப்பர் 6-40

**24-1 பொன்னார் மேனியனே**

*பொன்னியலும் திருமேனி, பொன்னே போல் திருமேனி*
*உடையான்* —அப்பர் 6-39-8, 6-29-2
*பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி*
—பொன்வண்ணத்-1

[25-1, 28-4, 55-10 பார்க்க.]

**,, மின்னார் செஞ்சடை**

*மின்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் வீழ்சடை*
—பொன்வண்ணத் - 1

**24-3 எம்மான் எம்மனை**

[21-5 பார்க்க.]

**,, எம்மான் எம்மனை என்றனக் கெட்டனைச் சார்வாகார்**

*எத்தாயர் எத்தந்தை...எம்மாடு சும்மாடாம் செத்தால்வந்*
*துதவுவார் ஒருவர் இல்லை* —அப்பர் 6-62-1

**,, மாயப் பிறவி**

*மாயப் பிறவி* —திருவாச. 33-8

**,, எய்த்தொழிந்தேன்**

*எய்த்தொழிந்தேன்* —அப்பர் 4-99-6

**24-5 கண்ணாய் ஏழுலகும் கருத்தாய் அருத்தமுமாய்**

*கண்ணானாய் மணியானாய் கருத்தானாய் அருத்தானாய்*—அப்பர் 4-13-7
*கண்ணவார் உலகுக்குக் கருத்தானார்* —சம்பந்தர் 3-64-1

,, **பண்ணார் இன்தமிழாய்ப் பரமாய பரஞ்சுடரே**

*பண்ணும்...பல ஓசைத் தமிழவையும் முழுதானான்*
—சம்பந்தர் 1-11-4
*தென்மொழியும்... ஆனவன்காண்* —அப்பர் 6-87-1

,, **பரமாய பரஞ்சுடரே**

*பரமாய பண்பினர்* —சம்பந்தர் 2-28-3
*பரமாய பரஞ்சுடரே* 28-9

**25-1 பொன் செய்த மேனியினீர்**

[24-1 *பார்க்க.*]

**25-2 வம்பமரும் குழலாள்**

*முருகலர் பூங்குழற் பரவை* —பெரியபுரா. ஏயர் 132

**25-3 பத்தா பத்தர்களுக் கருள்செய்யும் பரம்பரனே**

*பத்தாம் அடியார்க்கோர் பாங்கனுமாம்* —அப்பர் 6-15-2
*பத்துக் கொலாம் அடியார் செய்கை* —அப்பர் 4-18-10
*பத்துடை அடியவர்க் கெளியவன்* —திருவாய்மொழி 1-3-1

[80-1 *பார்க்க.*]

**25-7 கொந்தணவும் பொழில்**

*கொந்தணவும் பொழில்* —திருவாச 18-10

**26-1 கண்டார் காதலிக்கும் கணநாதன் எங் காளத்தியாய்**

*மேவினார் பிரிய மாட்டா விமலனார்* —பெரியபுரா-கண்ணப்பர் 174

,, **கணநாதனெங் காளத்தியாய்**

*காளத்தி காணப்பட்ட கணநாதன் காண்* —அப்பர் 6-8-1

,, **சிவனே என் செழுஞ்சுடரே**

*சிவனே என் செழுஞ்சுடரே* 28-8

**26-1 செண்டாடும் விடை**

*செண்டலம்பும் விடை* —சம்பந்தர் 3-32-3

**26-3** [4-8, 28-8 *பார்க்க.*]

26-7 கழற்போ தறியாத என்னுள் குடியாக் கோயில்
கொண்ட...குழகா

*அறவையேன் மனமே கோயிலாக் கொண்டாண்டு*—திருவாச-37-6

27-8 நிலனே நீர் வளி தீ நெடுவானக மாகி நின்ற புலனே

[9-3 *பார்க்க.*]

*நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப் பகலோன் புலனாய*
*மைந்தனோ டெண் வகையாய்ப் புணர்ந்து நின்றான்*
—திருவாச 15-5

28-4 பொன்மேனி

[24-1 *பார்க்க.*]

28-5 பொய்யாதென் உயிருட் புகுந்தாய் இன்னம் போந்தறியாய்

[21-1 *பார்க்க.*]

28-6 கண்ணாரும் மணியே (*கண்ணாருண்மணியே*)

*கண்ணிற் கருமணியே* —அப்பர் 6-47-1

28-7 எரியார் புன்சடை

*எரிபுன் சடை* —சம்பந்தர் 1-46-5

,, இளநாகம்

*முற்றலாமை இளநாகம்* —சம்பந்தர் 1-1-2

,, நரியாருஞ் சுடலை

*நரிவளர் சுடலை* —சம்பந்தர் 1-121-4

28-8 விளங்குங் குழைக்காதுடை வேதியனே

[4-8, 26-3 *பார்க்க.*]

,, சிவனே எம் செழுஞ்சுடரே [26-1 *பார்க்க.*]

28-9 [24-5 *பார்க்க.*]

29-4 *அப்படி அழகாய அணிநடை மட அன்னம்

**அப்படி பத்தி பழுத்த மனத்தினர்* —திருவகுப்பு 6-15
*இனிதுகவி அப்படி ப்ரசாதித்த பாவலனும்* ௸ 12-9
*ஒருபொருள் அப்பர்க் கப்படி ஒப்பித் தர்ச்சனை*
*கொண்ட நாதா* திருப்புகழ் 866

---

* *அப்படி - மெச்சத்தக்க நிலையில்.*

**29-4** ***ஒப்புடை ஒளி நீலம்**

ஒப்புடை ஒருவனை...அழலெழ விழித்தவனே —சம்பந்தர் 3-4-7

**29-5** [59-2 பார்க்க.]

**29-10** **இளங்கிளை ஆரூரன்**

எழுமையும் பெறுக இன்ன †இளங்கிளைச் சுற்றம் என்றான்
—சிந்தா - 1730

நம்பன் இளங்கிளை நன்குணராத —கம்பராமா. சூளாமணி 82

**30-1** **சிம்புளித்துச் சிந்தையினில் வைத்துகந்து**

சிம்புளித் தடித்தும் கம்பிதம் பாடியும் —பெருங்கதை 4-12-240

சுமந்த நாகமும் கண் சும்புளித்தவே —கம்பராமா. மிதிலை 132

,, **சிம்மாந்து (செம்மாந்து)**

அண்ணல் செம்மாந் திருந்தானே —சிந்தா-2358

திருமாமணி வண்ணன் செம்மாந்து நின்றான்
—சூளாமணி - அரசியல் 388

சேக்கை மெலியச் செம்மாந்திருந்த —பெருங்கதை 1-34-146

**30-3** **கொட்டாட்டுப் பாட்டு**

கொட்டிசைந்த ஆடலாய் —சம்பந்தர் 3-52-2

கொட்டமைந்த ஆடலான் ஷை 2-99-10

[13-6 பார்க்க.]

**30-6** **கொய்யுலா மலர்ச் சோலைக் குயில்கூவ மயிலாலும்**
**கொருடிக் கோயில்**

[10-3 பார்க்க.]

கொய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவ மயிலாலும் ஆரூரரை
—அப்பர் 4-5-1

**33-5** **கொடு கொட்டி காலர் கழலர்**

கொடுகொட்டி யாடுங்கால் கோடுயர் அகலல்குல்
கொடிபுரை நுசுப்பினாள் கொண்ட சீர்தருவாளோ
—கலித்தொகை-கடவுள் வாழ்த்து

திரிபுரம் எரியத் தேவர் வேண்ட இமையவன் ஆடிய
கொடுகொட்டி ஆடலும் —சிலப்பதி - கடலாடு 40-44

பட்டி யாள்பவர் கொட்டி யாடினர் —திருப்பு-954

---

* ஒப்பு - அழகு.

† இளங்கிளை - வயதில் இளைய சுற்றத்தார்.

**33-6 வந்த சாயினை அறிவரோ**

இந்திரன் தன் சாயாப் பெருஞ் சாய்கெட —கம்பரா - நாகபாச-21
(சாய் - புகழ்)
சாயாற் கரியானை —திவ்ய. இயற். பெரிய திருஅந்-14
(சாய் - நிறம்)

**33-9 ஞமண ஞாஞண ஞாண ஞோணமென் றோதி**

மூக்கினால் முரன்றோதி யக் குண்டிகை தூக்கினார் —அப்பர் 5-58-2

**34-5 பொன்செய் செஞ்சடை**

செம்பொனாற் செய்தழகு பெய்தாற் போலும் செஞ்சடை
—அப்பர் 6-4-9

[59-5 பார்க்க.]

**34-6 குலவன்**

'பனிக்கதிர்க் குலவன்' —கல்லாடம் 10

**,, புலமெலாம் வெறிகமழும் பூம்புகலூர்**

மலரூறு தேன் புலவமெல்லாம் வெறிகமழும் அந்தண்
புகலூர் —சம்பந்தர் 2-115-6

**34-8 எள்விழுந்திடம் பார்க்கு மாகிலும் ஈக்கும் ஈகிலன் ஆகிலும்**

ஈயிருக்கும் இடம் எனினு மிப்புவியில் யானவர்க்
கரசினிக் கொடேன் —வில்லிபாரதம் - கிருஷ். தூது 114

**34-9 பொத்தில் ஆந்தைகள் பாட்டறுப் புகலூர்**

பொத்தின்னிடை ஆந்தைபல பாடும் புளமங்கை—சம்பந்தர் 1-16-5
பொத்திலாந்தைகள் பாட்டறுப் புனவாயிலே 50-1

**35-3 திறம்பியா தெழு நெஞ்சமே சிறுகாலை நாமுறு வாணியம்**

செழுந் திருக்கை வேலைச் சிறுகாலை வாழ்த்தி
எழுந்திருக்கை வேலை எனக்கு தனிப்பாடல்

**35-5 புள்ளி நள்ளிகள்**

புள்ளிக் கள்வன் —ஐங்குறு 21, 22, 24
புடையினார் புள்ளிகால் பொருந்திய மடை —சம்பந்தர் 2-26-1
நள்ளி சேரும் வயல் —திருவாய்மொழி 9-10-2

**35-7 *புன்னைக் கன்னிக ளக்கரும்பு**

புன்னைய மலர்ப் பொழில்கள் அக்கின் ஒளிகாட்ட
—சம்பந்தர் 2-29-5

---

* 'புன்னைக் கன்னி கழிக்கணாறும்' என்றும் பாடம். கழிசூழ் கன்னிப்புன்னை - திருக்கோவை 177.

புன்னை முன்னம் அக்கு வரும் கழிக்கானல்
—11 திருமுறை. சிவ. இரட்டைமணி 30

,, **முன்னைச் செய்வினை இம்மையின் வந்து மூடும்**

முன்செய்த தீவினையோ யிங்ஙனேவந்து மூண்டதுவே
—பட்டினத்தார் (என்செயல்)

வினைப்பகை வீயாது பின்சென் றடும் —திருக்குறள் 207

**35-8 கடல் மண்டு காவிரி**

கடல்போற் காவேரி —சம்பந்தர் 1-67-5

**காவிரி நங்கை ஆடிய கங்கை நீர்**

கங்கைக்கு எயும்...பொன்னி ஷை 1-126-3

**36-10 பையவே *விடங்காக நின்று**

விடங்கு படக் குறிபலபாடி—பதினோ. திருஏகம்ப. திருஅந்தாதி 53

**37-4 அக்ரமங்கள் செயும் அடிகள் ஆரூரர்க்கு...வளைகள்**
**நில்லாமையும்...உணர்த்த வல்லீர்களே**

தையலை வெள்வளை கொள்வது...தோணி புரவர்க்குத்
தக்கதன்று தமது பெருமைக்கே —அப்பர் 5-45-2

**38-3 வளராத பிறையும் வரியரவும் உடன் துயில வைத்தருளும்**
**எந்தை**

பாம்பொடு திங்கள் பகைதீர்த் தாண்டாய் —அப்பர் 6-99-2

[23-1, 76-5 பார்க்க.]

**38-4 நாறுய பரனை**

நானென்றுந் தானென் றிரண்டில்லை என்பது, நானென்ற
ஞானமுதல்வனே நல்கினன், நானென்று நானும்
நினைப்பொழிந்தேனே — திருமந்திரம் 2820

தானென்றும் நானென்றும் சாற்ற கில்லேனே ஷை 1441

நான் பிரமமன்றி நடுவே உணர்த்துதற்கு, வான்பிரமம்
உள்ளதோ மற்று —துகளறுபோதம் 37

தன்னைக் கண்ட என்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
ஆகிய ஈசனுக்கே —பொன்வண்ணத்-1

,, **நாற்றனத் தொருவனை**

நாலாய பூதமும் நாதமும் ஒன்றிடின், நாலாம் நிலையாமென்
றுந்தீபற, நாதற்கிடமதென் றுந்தீபற —திருவுந்தியார் 36

* விடங்காக - சிருங்கார விலாசமாக.

நாதாந்தத் தேயிருப்பர் நாற்றானத் தேயிருப்பர்
வேதாந்தத் தேயிருப்பர் வேறு —திருக்களிற்றுப் - 80

38-6 *வெண்ணீறு சண்ணித்த மேனி எம்மகனை
மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான் —அப்பர் 4-5-1

,, *வானோர் தம்மானைத் தலைமகனை
வானோர் தம்மானைத் தலைமகனை —அப்பர் 6-27-1

38-8 நெடிமாறன் முடிமேல் தென்னனை
தென்பாண்டி நாட்டானே(னை) —திருவாச I-90; 8-19
அப்பாண்டி நாட்டைச் சிவலோகம் ஆக்குவித்த
அப்பார் சடையப்பன் —திருவாச. 8-11

,, பொன்னனை
பொன்னனவன் —சம்பந்தர் 1-16-6

39-4 *திருநின்ற செம்மை
திருநின்ற செம்மை —அப்பர் 4-8-1

39-6 கொன்றையான் அடியலாற் பேண எம்பிரான் சம்பந்தன்
"அண்டா" உன்னை யல்லால் அடையாதென தாதரவே
—சம்பந்தர் 3-55-10

கறைசேர் கண்டத்து எம்பெருமான் கழலல்லாற் பேணா
துள்ளமே; கைச்சிறு மறியவன் கழலலாற் பேணாக்
கருத்துடை ஞானசம்பந்தன் 1-80-6; 1-77-11

39-6 கார் கொண்ட கொடை
மேக நிகரான கொடை திருப்புகழ் 122
புயல் இலங்கும் கொடை —சம்பந்தர் 2-113-2

40-1 புள் வாயைக் கீண்டு
புள்வாய் பிளந்த புனிதா —பெரிய திருமொழி 7-1-4
புள்வாய் பிளந்து ௳ 4-5-4
புள்வாய் போழ்ந்து —சம்பந்தர் 1-42-9
புள்வாய் பிளந்தான் ௳ திருவிடைவாய் 9

---

* இவை போன்றவை அப்பர் பெருமான் பாடல்களைக் கற்றவர் சுந்தரர் என்பதைக் காட்டும்.

**40-1 உலகம் விழுங்கி உமிழ்ந்தானை**

இவ்வுலக மெல்லாம் உண்டானை உமிழ்ந்தானை
(உடையான் தன்னை) —அப்பர் 6-60-7

**,, உலகம் விழுங்கி உமிழ்ந்தானை, நான்முகத்தினனை**

அரியாய்க் காப்பான், அயனாகிப் படைப்பான், அரனாய்
அழிப்பானும் தானே —ஞானவுலா. கண்ணி 5
தாமரையான் செங்கண்மால் தானே கண்டாய் —அப்பர் 6-23-3
கரியானை நான்முகனை ஷை 6-1-1

**40-6 குழலவிழக் கோதை குடைந்தாட**

கோதை குழலாட —திருவாச 7-14

**,, விடை *யரவக் கொடி**

இடிபடு குரலுடை விடை —சம்பந்தர் 3-86-4

**40-9 பல உருவும் தன் உருவே ஆய பெருமானை**

ஒருவன் பல உருவன் —சம்பந்தர் 1-13-2
உருவம் பல உயிராய் வல்ல நந்தி —திருமந்திரம் 1248

**40-11 உரையினுர் மதயானை நாவலாரூரன்**

[69-1 பார்க்க.]

**41-1 †கதுவாய்த் தலையிற் பலி**

தொல்குடிக் கதுவாயாக —பெருங்கதை க-நூ௫-166
ஷை கதுவாய் போகாது க-சசு-37

**41-3 வானோர் அறியா நெறியானே**

வானோர் அறியா வழிஎமக்குத் தந்தருளும் —திருவாச 8-16

**42-4 மண்ணார் முழவு**

மண்ணார் முழவு —சம்பந்தர் 1-46-4

**42-5 கலந்தார்க் கருள் செய்திடுங் கற்பகமே**

கலந்தார்க் கென்றும் தேனவனை —அப்பர் 6-50-8
கலந்தவர்கட் கருள்புரியும் கருத்தினனை
—பெரிய திருமொழி 2-10-9

**,, க(ள்)ளையே கமழும் மலர்க் கொன்றை**

கள்ளார்ந்த பூங்கொன்றை —சம்பந்தர் 2-43-1

---

* அரவம் - ஓசை. † கதுவாய் - வடு.

42-7 நறுங்கொன்றை நயந்தவனே

*நறுங்கொன்றை நயந்தவனே* —சம்பந்தர் 3-1-1

43-2 ஏரிக் கனகக் கமல மலரன்ன சேவடி

*அந்தாமரைப் போதலர்ந்த அடி* —அப்பர் 6-6-10
*பொன்னடி* ,, டை 6-6-9
*ஆணிக் கனகமும் ஒக்கும் ஐயாறன் அடித்தலமே* டை 4-92-16
*தாமரைப் போதுருக்கிய செம்பொன்...உவமன்*
*இலாதன...இணையடியே* டை 4-100-10
*மாமலர்ப் பொன்னடி* —சம்பந்தர் 2-83-8

43-3 வாளிகள் (வாள்வீரர்)

*வாளிகள் நிலைபெற மறலுவார்* —பரிபா. 9-54

43-7 செடிச்சிகள் மன்றிலிடைப் பலி தேரப்போவது வாழ்க்கையே

*சென்றுதாம் செடிச்சியர் மனைதொறும் பலிகொளும்*
*இயல்பதுவே* —சம்பந்தர் 3-92-2

43-8 மந்தி கடுவனுக் குண்பழம்நாடி மலைப்புறம் முந்தி

*மந்தி பாய்ந்துண்டு விண்ட கோட் பலவின் தீங்கனியை*
*மாக்கடுவன் உண்டுகளும்* —சம்பந்தர் 2-71-2
*பலவின்கனி கவர்ந்துண்ட கடுவன்...மந்தியொடு*
*சிறந்து சேண் விளங்கி* —புறநா. 200
*கனிபெற்ற கடுவன் துய்த்தலை மந்தியைக்*
*கையிடூஉப் பயிரும்* —புறநா. 158

43-9 நின்காதலி ஊர்கள் தோறும் அறம்செய அட்டுமின் சில்பலிக்
கென் றகங்கடை நிற்பதே

*இடப்பான் முப்பத்திரண்டறம் வளர்ப்ப, வலப்பால்*
*இரத்தல் மாநிலத் தின்றே* —திருவாரூர் நான்மணி 9

44-2 சுடலைப்பொடி நீறன்றிச் சாந்தம் மற்றில்லையோ

*பூசு சாந்தம் பொடி நீறு* —சம்பந்தர் 3-119-1
*சாந்தமுந் திருநீறு* —திருவிசைப்பா 15-2

,, கொல்லைச் சில்லை வெள்ளேறு (*அன்றி ஏறுவதில்லையோ*)

*கொல்லை வெள்ளேறு* —சம்பந்தர் 2-95-3
*சில்லை மால்விடை* டை 2-93-6

[4-5 பார்க்க.]

44-3 வெட்டெனப் பேசன்மின்

*வெட்டெனப் பேசேல்* —ஆத்திசூடி - ஔவையார்

**44-7** பேரும் ஓராயிரம் என்பரால் எம்பிரானுக்கே

[18-3, 56-11 பார்க்க.]

*ஆயிரம் திருநாமம் பாடிநாம் தெள்ளேணம்
கொட்டாமோ* திருவாசகம் 11-1

*ஆயிரம் பேருகந்தானும் ஆரூர் அமர்ந்த அம்மானே ;
பேராயிரம் பரவி வானோர் ஏத்தும் பெம்மானை*
—அப்பர் 4-4-8, 6-54-8

*ஆயிரம் பேர்மிக உடையான்* சம்பந்தர் 2-94-5

**44-9** காடியாடு கழுக்கள்

*கழுக்களாய பிரட்டர்* —திருவிசைப்பா 4-3
*கடுக்கள் தின் கழுக்கள்* —சம்பந்தர் 3-53-10
*காடிதொடு சமண்* —சம்பந்தர் 2-71-10
*புளித் தட்டையர்* —சம்பந்தர் 1-106-10

,, கரிய மனச் சமண்

*கள்ளமார் மனத்துக் கலதிகள்* —சம்பந்தர் 3-122-10

**44-10** காய்சின மால்விடை

*காய் சினத்த விடை* —சம்பந்தர் 3-46-6
*சினமால் விடை* —திருவாச. 34-3

**45-3** ஆய்ந்தவன் ஆய்ந்தவன்

*பாதம் பணிவார்தம் பல்பிறவி ஆய்ந்தாய்ந்
தறுப்பாய்* —அப்பர் 4-96-2

**45-9** நாடுவன் நாபிக்குமேலே ஓர் நால்விரல், மாடுவன் வன்கை
பிடித்து மகிழ்ந்துளே, ஆடுவன் ஆமாத்தூரெம் அடிகட்கே

*நடலித்த நாபிக்கு நால்விரல் மேலே...கருத வல்லார்கள்
சடலத் தலைவனைத் தாமறிந்தாரே* —திருமந்திரம் 616

**46-1** செத்தார்தம் எலும் பணிந்து சேவேறித் திரிவீர்

*செத்தார் எலும்பணிவான்* 80-1

**46-2** காம்பினெடு நேத்திரங்கள் பணித்தருளவேண்டும்

*'பொற்சுரிகை காம்பு கனவளை'* —பெரியாழ்வார் 1-3-8

46-7 தூசுடைய அகலல்குல் தூமொழியாள் ஊடல் தொலையாத காலத்தோர் சொற்பாடாய் வந்து, தேசுடைய இலங்கையர் கோன் வரை எடுக்க அடர்த்துத் திப்பிய கீதம்பாடத் தேரொடு வாள் கொடுத்தீர்

*எனது புட்பகம் விலக்கு கயிலைக்கிரி முரிப்பன் எனவோர்*
*துகட்டுகள் படக்கடி தெடுத்தனன் மிகைத்தவர்*
*துணுக்கம் உறவே; அதிகோபமொடுகூடி னையா*
*ஊடலை மறந்துமை மடந்தை அரனைத் தனமுறந்*
*தழுவினள்*
—ராமாய. உத்தரகாண்டம் - வரை எடுத்த படலம் 68-70

*அருவியங் குன்றம் அரக்கன் பெயர்ப்ப*
*வெருவிய வெற்பரையன் பாவை - பெருமான்*
*அணியாக மாரத் தழுவினள் தான்முன்*
*தணியாத ஊடல் தணிந்து* —தண்டியலங் - பொருளணி 21
*சமாகித அணி பக்கம்* 149

46-10 வல்லீரா யாண்டீர்

*மண்ணின்மேல் மயங்கிக் கிடப்பேனை வலிய வந்தெனை*
*யாண்டுகொண்டானே* 70-2

47-2 மங்குல் திரிவாய்

*'மேகநல் ஊர்தியர்'* —அப்பர் 4-16-2
*அப்பர் ஒளிநெறி - தொகுதி*—1. *பக்கம்* 51 *கீழ்க்குறிப்பு*

48-1 மற்றுப்பற் றெனக் கின்றிநின்திருப் பாதமே மனம் பாவித்தேன்

*பாடிமால் புகழும் பாதமே அல்லால் பற்றுநான்*
*மற்றிலேன் கண்டாய்* —திருவாச. 28-3

49-1 எத்துக்கு இங்கிருந்தீர்

*உடலைச் சிதையாதது எத்துக்கு* —திருவாச. 33-2

50-1 சித்தநீநினை என்னொடு சூளறும்

*அயிராவணத்தொடு *சூளறும்* —சிந்தாமணி 2126

,, பொத்தில் ஆந்தைகள்

[34-9 *பார்க்க*.]

* சூளுறும் - சூளுறவேம் - இச்சொல் 'சூளறும்' எனவும் வழங்கும். சிந்தாமணி விசேடக்குறிப்பு 2126.

**50-2** வேடுவர் பொருது *சாத்தொடு பூசல்

*சாத்தொடு போந்து தனித்துயர் உழந்தேன்* —சிலப். 11-190

**50-4** பொற்குன்றஞ் சேர்ந்ததோர் காக்கை பொன்னும்

*கனகமலை யருகே, போயின காக்கையும் அன்றே*
*படைத்தது பொன்வண்ணமே* —பொன்வண்ணத். 100

**50-6** பிறவு கள்ளியின்நீள் கவட்டேறித் தன் பேடையைப் புறவம் கூப்பிட

*"நுண் பொறிப் புறவின் செங்காற் சேவல், வெண் சிறைப்*
*பெடையொடு விளையாட்டு விரும்பி, வன்பரலார்ந்த*
*வயிற்ற வாகிக், கண்பொரி கள்ளிக் கவர்சினை யேறிக்,*
*கூப்பிடு குரலிசை சேட்புலத் திசைப்பவும்"*
—பெருங்கதை க-டுஉ-46-50

*"சேவல் உள்ளிப்...பேடை பொரிகாற் கள்ளி கவட்டுத்*
*தயங்க இருந்து புலம்பக் கூஉம் அருஞ் சுரவைப்பு*
—குறுந்தொகை 154

**50-8** கொள்ளி வாயின கூரெயிற் றேனம் கிழிக்கவே, தெள்ளி மாமணி தீவிழிக்கும் இடம்...புனவாயிலே

*'ஏனம் உழுத...இனமணியைக், கானவர்தம் மக்கள் கனலென்ன'*
*'ஏனம் கிளைத்த இனபவள மாமணிகள் கானல் எரிபரப்ப'*
—ஈங்கோய் எழுபது 14, 15

• *ஏனல் உழுத கதிர்மணி* —சம்பந்தர் 3-69-2
*ஏனத் திரள் கிளைக்க எரிபோல் மணி சிதர்த்தி* 79-9
*ஏனம் குளம்பால் மணிகிளைக்கும்*
—நளவெண்பா - கலிதொடர் 114

[79-9 பார்க்க.]

,, கள்ளிவற்றிப் புல் தீந்து வெங்கானம் கழிக்கவே

*கள்ளிவே கத்தரவின் கண்மணிக டாம்பொடியாத்*
*துள்ளிவே கின்ற சுரம்* நளவெண்பா - கலிதொடர் 79

**50-9** கோழிபோய்ப் புற்றேறிக் கூகூ என அழைக்கும்

*புலையன்றன் மலமுண்ணும் எனையுண்ணும் புலையர்க்குக்*
*குலமென்ன நலமென்ன கூகூஎன் றறுகோழி* (தனிப்பாடல்)

* *சாத்து - வாணிகக் கூட்டம்: வாணிகம் செய்வோர் திரள்.*

(ii) தொண்டர்களிடம் முறையீடு: வேண்டுகோள்

(எந்தை) இருப்பதும் ஆரூர் அவர் எம்மையும் ஆள்வரோ கேளீர் 73

## 142. சுந்தரர் கண்டு தொழப்பெற விரும்பியவை

(பதிகம் 84)

அடியார் கல்லவடப் பரிசு 84-5
இதழித் தொத்து 84-5
எண்டோள் 84-1
ஓசையைப் பாடல் 84-2
கல்ல வடப்பரிசு 84-5
குளிர் மா மத்தம் 84-2
கூதவிடுஞ்சடை 84-2
கைம்மிசைக் கூரெரி 84-5
கொக்கிறகு 84-2
கொண்டல் எனத் திகழும் கண்டம் 84-1
கொல்லை விடைக் கழுகு 84-5
கோல நறுஞ்சடைமேல் வண்ணம் 84-1
கோளரவு 84-2
சோதி யிளம்பிறை 84-1
திண்மழு 84-5
தில்லை நகர்ப் பொதுவுற் றாடியசீர் நடம் 84-5
தொண்டர் அடித்தொழல் 84-1
புண்டரிகப் பரிசாம் மேனி 84-1
மெல்லியலாள் ஒருபால்...கூறுசெய்...பரிசு, மென் முலையாள்
பாகம் 84-5, 1

## 143. சுந்தரர் தம்மைத்தாமே வைதல், இழித்துக் கூறுதல்

அடிநாய் 59-11, 86-10, 94-10
அருள் வடிவிலான் 33-10
அருவினையேன் 51-5
அறிவில்லேன் 1-5
அறிவிலா நாயேன் 38-1
அறிவிலியேன் 51-3
ஆதன் 1-5
இரைப்பன் (வீணன், வெற்றெலியன், வீண் ஆடம்பரத்தன்) 60-2
இழுதையேன் 60-1

## 144. சுந்தரர் தம் குறைகளை, தம் குணத்தை எடுத்துக் கூறுதல், தம்மை இழித்துக் கூறுதல், வாழ்க்கை நிலையாமை கண்டஞ்சுதல்



* அலர் - மலர், பழிச்சொல்; † அருத்தம் - செல்வப் பொருள்.

* அலவலை - மனச் சஞ்சலம். † அன்றி - பகைத்து.

| | |
|---|---|
| கூறுமா றுன்பணி கூறாத அடியேன் நான் | 96-9 |
| கொடியேன் பல பொய்யே உரைப்பேனைக் குறிக் கொள்நீ | 1-4 |
| கொடுக்க கிற்றிலேன் ஒண்பொருள் தன்னை | 60-7 |
| *சந்தம் பல அறுக்கில்லேன் | 73-7 |
| சார்ந்தவர் தம் அடிச் சாரேன் | 73-7 |
| சிந்தித்தே மனம் வைக்கவும் மாட்டேன் | 60-4 |
| சிறுச் சிறிதே இரப்பார்கட் கொன் றீயேன் | 60-4 |
| சுந்தர வேடங்களால் துரிசே செயுந் தொண்டன் எனை | 100-3 |
| செஞ்சே லன்ன கண்ணார் திறத்தே கிடந் துற்றலறி, நஞ்சேன் நான் அடியேன் நலமொன் றறியாமையினால் | 26-5 |
| செடியனேன் நாயேன் அறியுமா றறிகிலேன் எம்பெருமானை | 74-4 |
| செடியனேன் நாயேன் ஆருமா றறிகிலேன் எம்பெருமானை | 74-8 |
| செடியனேன் நாயேன் உரையுமா றறிகிலேன் எம்பெருமானை | 74-7 |
| செடியனேன் நாயேன் சொல்லுமா றறிகிலேன் எம்பெருமானை | 74-3 |
| செடியனேன் நாயேன் பாடுமா றறிகிலேன் எம்பெருமானை | 74-2 |
| செடியேன் நான் | 96-9 |
| செய்வினை ஒன் றறியாதேன் | 89-3 |
| செய்வினை நல்லன செய்யாத கடியேன் | 96-9 |
| செல்லுமா செல்லச் செலுத்துமா றறியேன் | 67-6 |
| சொல்லிற் குலாவன் றிச் சொல்லேன் | 73-3 |
| தக்கவா றொன் றும் இலாதேன் | 73-9 |
| †தமரம் பெரிதும் உகப்பன் | 73-9 |
| தேடி எங்குங் காண்கிலேன் | 77-11 |
| தேடுமா தேடித் திருத்துமா றறியேன் | 67-6 |
| தேற்றாதன சொல்லித் திரிவேனோ | 1-8 |
| ‡தொடர்ந்தவர்க்கும் துணை அல்லேன் | 73-3 |
| தொண்டனேன் பரம் அல்லதொரு...ஆனை தந்தான் | 100-6 |
| தொண்டனேன் பரம் அல்லதொரு...வேழம் அருள் புரிந்தான் | 100-4 |
| நடுக்கம் உற்றதோர் மூப்புவந் தெய்த நமன் தமர் நரகத்திடல் அஞ்சி இடுக்கண் உற்றனன் | 60-7 |
| நல்லம் தார் கூரைபுக்கு நலமிக அறிந்தே னல்லேன் | 8-4 |
| நல்லே னல்லேன் நானுமக் கல்லால் | 15-4 |
| நலமொன் றறியாமையினால் துஞ்சேன் | 26-5 |
| நன் றியில் வினையே துணிந் தெய்த்தேன் | 60-2 |
| நாயேன் பலநாளும் நினைப்பின்றி மனத் துன்னைப் பேயாய்த் திரிந்தெய்த்தேன் | 1-2 |

---

* சந்தம் - ஆசை ; சந்தப் பாடல்கள்.

† தமரம் - வெறும் ஆரவாரம்.

‡ தொடர்ந்தவர் - அடியராய்த் தொடர்ந்தவர் "சார்ந்தவர்" என 73-7-ல் வருவது காண்க.

* கிலாய்ப்பன் - அங்கலாய்ப்பேன், வருந்துவேன்.
† சழக்கு - பயனில் சொல்; குற்றம்.
‡ மிறை - குற்றம். தறி - வெட்டெனப் பேசுதல்.

## 145. சுந்தரர் தமது நெஞ்சொடு கிளத்தல்

நெஞ்சமே! புறம்பயந் தொழப் போதுமே 35
படையெலாம் பகடார ஆளிலும், பல்வஞ் சூழ்ந்தர சாளிலும்,
கடையெலாம் பிணைத்தேரை வால், கவலாதெழு
மடநெஞ்சமே...புறம்பயந் தொழப் போதுமே 35-6
பண்டரியன செய்த தீமையும் பாவமும் பறையும்படி
கண்டரியன கேட்டியேல் கவலாதெழு மடநெஞ்சமே .. 35-9
பதியும் சுற்றமும் பெற்ற மக்களும் பண்டையரல்லர் பெண்டிரும்
நிதியி லிம்மனை வாழும் வாழ்க்கையும் நினைப்பொழி
மடநெஞ்சமே...புறம்பயந் தொழப் போதுமே 35-2
புறந் திரைந்து நரம்பெழுந்து நரைத்துநீ உரையால் தளர்ந்,
தறம்புரிந்து நினைப்பதாண்மை யரிது காணிஃதறிதியேல்,
திறம்பியா தெழுநெஞ்சமே சிறுகாலை நாமுறு வாணியம்... 35-3
மடித்தாடும் அடிமைக்கண் அன்றியே மனனேநீ வாழுநாளும்
தடுத்தாட்டித் தருமனார் தமர்செக்கில் இடும்போது
தடுத்தாட் கொள்வான் 90-1
மலமெலாம் அறும் இம்மையே, மறுமைக்கும் வல்வினை சார்கிலா,
சலமெலாம் ஒழி நெஞ்சமே...புறம்பயந் தொழப் போதுமே 35-8
மற்றொருவரைப் பற்றிலேன் மறவா தெழுமட நெஞ்சமே... 35-4
முன்னைச் செய்வினை இம்மையில் வந்து மூடுமாதலின் முன்னமே
என்னைநீ தியக்காதெழு மடநெஞ்சமே... 35-7
வாடிநீயிருந் தென்செய்தி மனனே! வருந்தி யானுற்ற
வல்வினைக் கஞ்சி, ஊடினால் இனி ஆவதொன் றுண்டே
ஒற்றியூர் எனும் ஊர் உறைவானே 54-8
வாழ்வை உகந்த நெஞ்சே 100-4

## 146. சுந்தரர் வரலாறு

1. வரலாறு நிரம்ப உள்ள பதிகம் 100

### 2. தமது பழைய நிலையைக் கூறுவது

(i) *தானெனை முன்படைத்தான் அதறிந்து தன்
பொன்னடிக்கே நானென்ன பாடல் அந்தோ 100-1

---

* இது கண்ணுடியிலிருந்து முன்பு தாம் படைக்கப்பட்டு வந்ததைக் குறிக்கும். "நீடிய தண் கயிலாயத் தாடியில்தன் நிமலவுரு நிழற்ற ஆங்கே கூடிவரும் பெருங்கிழமை" —பூவாளூர்ப் புராணம்.

"தானெனை முன்படைத்தான் என்ற தகவுரையை
நானென்று உண்மை பெற்று நாமுணர்வ தெந்நாளோ" என்னும் இப்பகுதி தாயுமானுரால் 'அறிஞருரை'யில் எடுத்தாளப்பட்டுளது.

(ii) *அணுக்க வன்றொண்டன் 70-10
(iii) உரிமையால் உரியேன் 14-11
(iv) கல்லால் நிழற்கீழ் ஒருநாள் கண்டதும் அல்லால் விரகொன்றிலம் எம்பெருமான் 2-5

(கயிலையிற்) கமலினி அநிந்திதை என்னும் மாதர்களின் கண்வலைப்பட்டதால் வினைக்கு ஆளானேன் என வருந்தியது

(v) கட்டனேன் பிறந்தேன் உனக்காளாய்க் காதற் சங்கிலி காரணமாக 54-2
(vi) கூடுமாறெங்ஙனமோ என்று கூறக் குறித்துக் காட்டிக் கொணர்ந்தெனை யாண்டு, வாடிநீ வாளா வருந்த லென்பானை வலிவலந்தனிற் கண்டு கொண்டேனே 67-6
(vii) மானை நோக்கியர் கண்வலைப்பட்டு வருந்தி யானுற்ற வல்வினைக்கஞ்சி 54-6
(viii) மருவிப் பிரிய மாட்டேன்நான் †வழிநின் றொழிந்தேன் ஒழிகிலேன் 77-3
(ix) வாடிநீயிருந் தென்செய்தி மனனே, வருந்தி யானுற்ற வல்வினைக் கஞ்சி-ஊடினால் இனி ஆவதொன் றுண்டே ஒற்றியூர் எனும் ஊர் உறைவானே 54-8

## 3. மண்ணுலகில் நரனாக விதிக்கப்பட்டது

வறிதே நிலையாத இம் மண்ணுலகில் ‡நரனாக வகுத்தனை நான் நிலையேன், பொறிவாயில் இவ்வைந்தினையும் அவியப் பொருது உன் அடியே புகும் சூழல் சொல்லே 3-2

## 4. சுந்தரர் ஊர் நாவலூர் என்பது

திருநாவல் ஆரூரன் 19-11
நாதனுக் கூர் நமக்கு ஊர்...நாவலூர் என்றேத நற்றக்க வன்றொண்டன் ஆரூரன் 17-11
நாவலூரன் 34-11

---

* அணுக்கன் - அகம்படித் தொண்டு செய்பவன். கயிலையில் அண்மையிலிருந்து தொண்டு செய்தவர். "சுந்தரனைத் துணைக்கவரி வீசக் கொண்டார்" —அப்பர், 6-96-5.

† கயிலையில் ஒழுக்கம் தவறினதால் உன்னைவிட்டுப் பிரிந்தேன்; இனிப் பிரியேன்.

‡ தலைப்பு 146-2, (viii) - பாடல் 77-3ன் கீழ்க் குறிப்பைப் பார்க்கவும்.

## 5. சுந்தரருடைய குலம்

*அருங் குலத்து ஊரன்* 72-11
*அல்லியந் *தாமரைத்தார் ஆரூரன்* 22-10

## 6. தந்தை தாய் இன்னாரெனல்

*இசைஞானி †காதலன்* 39-11
*இசைஞானி சிறுவன்* 38-10
*சடையன்-இசைஞானி காதலன்* 39-11
*சடையன் காதலன்* 57-12
*சடையன்தன் காதலன்* 58-10
*சடையன் தன் சிறுவன்* 34-11
*சடையனவன் ‡சிறுவன்* 7-11
*நண்புடைய நன்சடையன் §இசைஞானி சிறுவன்* 16-11

## 7. தமது பேயர் 'ஆரூரன்' என வந்ததின் காரணம்

*ஆரூர்த் திருமூலட் டானத்தே அடிப்பே ராரூரன்* 95-11
*ஆரூரன் ஆரூரன்பேர் முடிவைத்த...புலவன்* 41-9
*சீராருந் திருவாரூர்ச் சிவன்பேர் சென்னியில் வைத்த ஆரூரன்* 89-11

## 8. சுந்தரர் நல்ல அழகும், தேகக்கட்டும் உள்ளவர் என்பது

*திருமருவுந் திரள் தோளான்* 73-11
*மலை மலிந்த தோளூரன்* 30-11

## 9. நான்மறை, அங்கம் ஓதினவர் சுந்தரர் என்பது

*நாளும் ஞாலந்தான் பரவப் படுகின்ற நான்மறை அங்கம்*
*ஓதிய நாவன் வன்றொண்டன்* 54-10

## 10. நல்ல சீலத்தவர் சுந்தரர் என்பது

*சீலந்தான் பெரிதும் மிகவல்ல சிறுவன் வன்றொண்டன்* 54-10
*நீதியில் ஒன்றும் வழுவேன்* 73-5

## 11. சிறு வயதினர் என்பது

**(திருவொற்றியூரிற் சங்கிலியாரை மணஞ் செய்து, பின்பு)**
**கண்ணிழந்த காலத்தில் சுந்தரர் சிறு வயதினர் என்பது**

*சீலந்தான் பெரிதும் மிகவல்ல சிறுவன் வன்றொண்டன் [திரு ஒற்றியூர்ப் பதிகம்]* 54-10

---

* *தாமரைத்தார் அந்தணருக்கு உரியது.*
†, ‡, § *தலைப்பு 146-12ல் செய்யுள் 17-7ன் கீழ்க்குறிப்பைப் பார்க்க.*

## 12. சிவபிரான் வேதிய விருத்தனாக வந்து, வாதாடி, ஓலை உண்டுபண்ணிக் காட்டித் திருவெண்ணெய் நல்லூரில் வலிய ஆட்கொண்டதும், பின் ஒளித்ததும்

அடக்கங்கொண் டாவணங் காட்டி,நல் வெண்ணெயூர்
ஆளுங் கொண்டார் 17-10
அன்று வந்தெனை அகலிடத் தவர்முன் ஆளதாகவென் றாவணங்
காட்டி நின்று வெண்ணெய் நல்லூர்மிசை ஒளித்த
சித்திலத்திரள் தொத்தினை 62-5
ஆத்த மென்றெனை ஆளுகந்தானை 62-4
ஆவணஞ்*செய் தாளுங் கொண்டு 5-10
†ஒட்டியாட் கொண்டுபோய் ஒளித்திட்ட உச்சிப் போதனை 59-10
ஓர் ஆவணத்தால் எம்பிரானார் வெண்ணெய் நல்லூரில்
வைத்தெனை ஆளுங்கொண்ட நம்பிரானார் 17-5
காண்டனன் காண்டனன் காரிகையாள் தன் கருத்தனாய்
ஆண்டனன் ஆண்டனன் 45-1
செய்யவனாகிவந்திங் கிடரானவை தீர்த்தவனே 26-6
‡தாயவளாய்த் தந்தை ஆகிச் சாதல் பிறத்தலின்றிப்,
போயகலாமைத் தன் பொன்னடிக் கென்னைப் பொருந்த
வைத்த வேயவனார் 17-7

---

* செய்து - உண்டு பண்ணி.

† இது 'அடிமையிவன் எனக்கு' என்னும் சபதத்துடன் போய்ச் சுந்தரரைத் தடுத்தாட்கொண்டு திருவெண்ணெய் நல்லூர்த் திருக்கோயிலுள் உச்சிப்போதில் சிவபிரான் (வேதியர்) ஒளிந்து மறைந்ததைக் குறிக்கும்போலும், 62-5ம் பார்க்க.

பெரிய புராணம் விரிவுரை (விறன்மிண்ட-புரா. பக்கம் 63 கீழ்க் குறிப்பு பின்வருமாறு உளது: 'திருவாரூராரையும்......தியாகேசரையும் புறகென்று விறன்மிண்ட நாயனார் சொல்லியபின், "திருவாரூர்த் திருக்கோயில் இரண்டாம் ஆவரணத்தில் மதிற்சுவரை ஒட்டி வடக்குத் திருவாயிலுக்கு நேரே தியாகேசர் வன்றொண்டர்க்குக் காட்சி தந்தருளினர். அதனைக் குறிக்க இப்போது அங்கு 'ஒட்டுத் தியாகர் கோயில்' என்றொரு சிறு ஆலயம் உண்டு. இதனை நினைந்தே நம்பிகள் 'ஒட்டியாட் கொண்டு போயொளித்திட்ட உச்சிப் போதனை' எனக் குறித்தனர் போலும்.'

‡ ஆங்காங்கு, சடையன் இசைஞானி சிறுவன், காதலன் என்றாரே ஒழிய, 'மகன்' 'பிள்ளை' எனக் கூறாததாலும், எம்மான் எம் அ(ன்னை) என்னாது 'எம்மான் எம்அ(ன்)னை என்றவர்' (21-5) என்று கூறினதாலும், சிவனே தமக்குத் தாய் தந்தையாய்-இசை ஞானியாரின் கருவில் அமைந்து பிறவாமல், சடையனார் - இசை ஞானியார் இல்லத்திற்

நம்பனே அன்று வெண்ணெய் நல்லூரில் நாயினேன் தன்னை
ஆட்கொண்ட சம்புவே 69-8
நேசத்தினால் என்னை ஆண்டு கொண்டார் 19-2
படுவிப்பாய் உனக்கே ஆள் 29-9
பலரையும் பணியாமே தொடுவிப்பாய் 29-9
போந்தனை தரியாமே 29-7
மண்ணின்மேல் மயங்கிக் கிடப்பேனை வலிய வந்தெனை
ஆண்டு கொண்டானே 70-2
முன்செய்த வல்வினைகள் களை களைந்தெனை ஆளல்லுறு கண்டன் 71-7
வந்தொருநாள் இடமாடியார் வெண்ணெய் நல்லூரில்
வைத்தெனை ஆளுங்கொண்ட நடமாடியார் 17-9
வாயாடி மாமறை யோதி ஓர் வேதியனாகி வந்து...வெண்ணெய்
நல்லூரில் வைத்தெனை ஆளுங்கொண்ட நாயாடியார் 17-8
விருத்தனாய வேதன் 6 10
விலை ஆவணம் உடையாய் 23-5
வெண்ணெய் நல்லூரில் அற்புதப்பழ ஆவணங் காட்டி அடியனா
என்னை ஆளது கொண்ட நற்பதத்தை நள்ளாறனை 68-6
வெண்ணெய் நல்லூரில் வைத்தெனை ஆளும்கொண்ட *(ஏவலனார்) 17

---

சிறுவனாகத் தோன்றினரோ சுந்தரர்!; பிறத்தல் இல்லாமையால் தான் சுந்தரர் இறத்தல் இல்லாது கயிலைக்குக் 'களையா உடலோடு' சென்றனர் போலும்.

மேலும், "சாதலும் பிறத்தலும் தவிர்த்து என்னை
வகுத்துத், தன்னருள் தந்தஎம் தலைவனை" (58-1)
"சாதல் பிறத்தலின்றி" (17-7)
"மண்ணுலகில் நரனாக வகுத்தனை" (3-2)

என வருவனவும் கவனிக்கற்பாலன.

"மனைவி இசைஞானியொடு மணங்கமழ்மென் மலரணையில்
வதிந்து நெஞ்சங், கனிவினொடு மகப்பேறிலாமையினைக்
குறித்துருகிக் கழறுங்காலை...ஒளிர்சோதியில் இருவர்
நாப்பண்...மூன்று வயதொடு மதலை பற்பல பூடணமிலங்க
முக்கட்தேவன் தோன்றினன் என்றுள மகிழ்ந்து சடையனார்
கரத்தெடுத்துத் தோளிற் சேர்த்தார்.. வான்தரு மென்மலர்
சொரிந்து வளவார் துந்துமி முழக்கு வானோர் ஆர்த்தார்"
சுந்தரர் அவதார-89, 90.—திருநாவலூர்ப் புராணம்.

* "எனது ஏவலைச் செய்யவேண்டிய அடிமை இவன்" எனச் சொல்லி வெற்றிகரமாக வாதாடித் தமக்கு நன்மை செய்வித்த காரணத்தால் பெருமானை—ஏவலனார், நாவலனார், நன்மையினார், நம்பிரானார், நாயனார், நாயாடியார், நடமாடியார் என்றெல்லாம் ஆரூரர் குறிப்பிடுகின்றார். (நாயாடியார் - வேட்டை ஆடினவர்)

## 13. உனக்கு ஆளாய் விட்டேன்; இனி 'அல்லேன்' என மாட்டேன், நீயே எனது குரு, உனக்குக் குற்றேவல் செய்வேன் என்றது

(அத்தா) உனக்காளாய் இனி அல்லேன் எனல் ஆமே 1
ஆமாத்தூரெம் அடிகட்கு ஆட்பூண்டனன் பூண்டனன் பொய்யன்று 45-1
ஆமாத்தூரெம் அடிகளைக் கூடுவன் கூடுவன் குற்றம தற்றென் குறிப்பொடே 45-2
குறியே என்னுடைய குருவே! உன் குற்றேவல் செய்வேன் 26-4

## 14. சிவனுக்கு அடிமை பூண்டேன், அவர் என்தலைவர், அவர் என்னை ஆட்கொண்டார், பிறரோடு சேரேன்—என்றது

அடையுடையன் 89-2
ஆண்ட நம்பி முன்னை 63-6
ஆண்டவன் ஆண்டவன் ஆமாத்தூரையும் என்னையுமாட்பூண்டவன் பூண்டவன் 45-6
ஆணையூல் அடியேன் அடிநாயேன் 57-1
*ஆரூரன் தம்பிரான் ஆரூரன் 90-10
இங்ஙனம் வந்திடர்ப் பிறவிப் பிறந்தயர்வேன் அயராமே அங்ஙனம்வந் தெனையாண்ட அருமருந்து 51-4
எத்தான் மறவாதே நினைக்கின்றேன், மனத்து உன்னை வைத்தாய் 1-1
என்னை ஆளுடை நம்பி 63
என்னை இன்னருள் எய்துவிப்பானை 56-2
என்னை உடையான் 91-6
எனை உடையான் 89-2
ஏழேழு படிகால் எமையாண்ட பெம்மான் 52-9
கூடுமா றெங்ஙனமோ வென்று கூறக் குறித்துக் காட்டிக் கொணர்ந்தெனை யாண்டு வாடிநீ வாளா வருந்த லென்பானை 67-6
சரண மென்பேன் அடையுடையன் 89-2
தொண்டனேன் அறியாமை அறிந்து, கல்வியன் மனத்தைக் கசிவித்துக் கழலடி காட்டி என் களைகளை அறுக்கும் (வானவர் வணங்க நின்றானை) 67-5
தொண்டாடித் திரிவேனைத் தொழும்பு தலைக்கேற்றும் சுந்தரனே 46-5
நமை யாளுடையான் 50-3
பொய்யே செய்து புறம்புறமே திரிவேன் தன்னைப் போகாமே மெய்யே வந்திங் கெனையாண்ட மெய்யா! 52-2

* ஆரூரனை ஆண்ட பிரான்: 'தம்மானை அறியாத சாதியாருளரே' 38-1.

முன்னை நம்பி...வார்சடை நம்பி முழுதிவை யித்தனையுந்
தொகுத்தாண்ட தென்னை நம்பி 63-7
வாழ்விப்பன் என ஆண்டீர் வழியடியேன் உமக்கு 46-8
வீண் அடிமை உகந்தீர் 46-4

## 15. 'வன்றொண்டன்' எனத் தமக்குப் பெயர் வந்த காரணம்

தன்மையி னால்அடி யேனைத் தாம் ஆட்கொண்ட நாட்சபைமுன்
வன்மைகள் பேசி வன்றொண்டன் என்பதோர் வாழ்வு
தந்தார் 17-2

## தலயாத்திரைத் தொடக்கம்

### 16. துறையூரில் "தவநெறி" தா என வேண்டியது

துறையூர்த் (தலைவா) உனை வேண்டிக் கொள்வேன் தவநெறியே 13

### 17. திருவடி தீக்ஷை பெற விரும்பியதும், வந்தவர் இறைவர் என்பதை அறியாது அவரை மதியாது பேசினதும், அதற்காக வருந்தியதும்

ஆரூரன் மதியாது சொன்ன அன்பனை...அதிகை மாநகருள்
வாழ்பவனை இறைபோதும் இகழ்வன் போலியானே 33-10
*தம்மானை அறியாத சாதியார் உளரே...அறிவிலா நாயேன்
எம்மானை கெடிலவட வீரட்டானத் துறைவானை
இறைபோதும் இகழ்வன்போலியானே 38-1
எம்மான் தன் அடிக்கொண் டென் முடிமேல் வைத்திடும்
என்னும் ஆசையால் வாழ்கின்ற...நாயேன் 38-1

### 18. காழிப் பெருமானின் காட்சிபெற்றது

(கடவுளை)...கழுமல வளநகர்க் கண்டு கொண்டேனே 58

### 19. திருவாரூரிற் சுந்தரருக்கு இருந்த பற்றும், திருவாரூர்த் தொண்டர்கள் தம்மை எதிர்கொண்டு அழைத்தபோது அவர்களை நோக்கிப் பாடினதும்

(அரையன்) இருப்பதும் ஆரூர் அவர் எம்மையும் ஆள்வரோ கேளீர் 73

---

* திருஅதிகைக்கு அடுத்த சித்தவட மடத்தில் தூங்கும்போது இறைவர் சுந்தரரின் முடிமீது தமது தாளை நீட்டி வைக்க, இறைவர் என்று அறியாது நீர் யார், சும்மா மிதிக்கிறீர் என்று சுந்தரர் கேட்க, என்னை அறிந்திலையோ என்று கூறி இறைவர் மறைந்த வரலாறு இங்குக் குறிக்கப்பட்டுளது.

எந்தை இருப்பதும் ஆரூர் அவர் எம்மையும் ஆள்வரோ என்று
சிந்தை செயுந் திறம் வல்லான் நாவலாரூரன் 73-11
திருவாரூரே சிந்திப்பன் 77-11

## 20. பரவைச் சிவனருளால் மணஞ்செயப் பெற்றது

மாழை யொண்கண் பரவையைத் தந்தாண்டானை 51-10

## 21. அடியேன், அடியார்க் கடியேன் எனத் திருத்தொண்டத் தொகை பாடினது

தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்...ஆரூரன்
ஆரூரில் அம்மானுக் காளே...ஆரூரன் அடிமை கேட்
டுவப்பார் ஆரூரில் அம்மானுக் கன்பராவாரே 39

## 22. திருத்தொண்டத்தொகை பாடினதற்கு முன்னரே, *கச்சியைத் தரிசித்தற்கு முன்னரே, சுந்தரருடைய தாய்தந்தையார் சிவனடி கூடிவிட்டார் என்பது

†எம்மான் எம்(அ)ன்னை யென்றவரிட் டிறந்தொழிந்தார் 21-5
என்னவனும் அரனடியே அடைந்திட்ட சடையன்
இசைஞானி (சிறுவன்) 39-11

## 23. பரவையின் வருத்தம் நீங்கக் குண்டையூரில் நெல் பெற்றதும், திருவாரூருக்கு நெல் வந்துசேர ஆள்வேண்டிப் பாடினதும்

கோளிலி எம்பெருமான் குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்றேன்
,, அல்லல் களைந்தடியேற் கவை அட்டித்தரப் பணியே 20-4, 5
,, அவை அட்டித்தரப் பணியே 20-2, 3, 6, 9
,, அன்பதுவா யடியேற் கவை அட்டித் தரப் பணியே 20-7
, ஆளிலை எம்பெருமான் அவை அட்டித் தரப் பணியே 20-1
,, இரக்கமதா யடியேற் கவை அட்டித் தரப் பணியே 20-8
உமைநங்கை ஓர் பங்குடையாய்...பரவை பசி வருத்தம் அது
நீயும் அறிதியன்றே 20-6

---

* கச்சியைத் தரிசித்ததற்கு முன்பே தாய்தந்தையர் இருவரையும் இழந்திருந்தனர் சுந்தரர் என்பது "எம்மான் எம்(அ)ன்னை என்றவரிட் டிறந் தொழிந்தார்" எனக் கச்சி மேற்றளிப் பதிகத்தில் (21-5) வருவதால் அறியக்கிடக்கின்றது.

† எம்மான் - என்தந்தை ; எம்மனை - எம்அன்னை 24-3-ம் பார்க்க.

திருநாவல வூரனவன் நெல்லிட ஆட்கள் வேண்டி
நினைந்தேத்திய பத்து 20-10
மாதர் நல்லார் வருத்தமது நீயும் அறிதியன்றே 20-3
வாளன கண் மடவாள் அவள் வாடி வருந்தாமே, கோளிலி
எம்பெருமான் குண்டையூர்ச் சில நெல்லுப் பெற்றேன்,
ஆளிலை எம்பெருமான் அவை அட்டித் தரப்பணியே 20-1

## 24. வனப்பகை, சிங்கடி இவர்தம் தந்தையாகத் தம்மைக் கூறுவது

கோட்புலி சேடார் பூங்குழற் சிங்கடியப்பன் திருவாரூரன் 15-10
(நங்கை) சிங்கடி தந்தை 27-10, 37-11, 47-10, 57-12, 68-10, 7[illegible]-10, 98-11
வனப்பகை அப்பன் (வன்றொண்டன்) 12-11, 29-10, 30-11, 33-10, 34-11, 44-10, 57-12, 63-10, 87-10

## 25. வலிவலத்திற் பெருமானைக் கண்டு களித்தது

வலிவலந் தனில் வந்து கண்டேனே 67

## 26. திருப்புகலூரிற் (பொன் பெற்று) புகலூர் பாடுமின் புலவீர்காள் என்று உபதேசித்தது

புகலூர் பாடுமின் புலவீர்காள் (இம்மையே தரும்
சோறுங் கூறையும்) 34, 34-1

## 27. திருப்பனையூரிற் பரமனது திருக்கூத்தைத் தரிசிக்கப் பெற்றது

அரங்கி லாட வல்லார் அவரே அழகியரே 87-7
தொண்டர்கள் துள்ளிப் பாடநின்று ஆடுமாறு வல்லார்
அவரே அழகியரே 87-1
துரங்கன் வாய்ப் பிளந்தானும் தாமலர்த் தோன்றலும்
அறியாமற் றோன்றிநின் றரங்கில் ஆட வல்லார் 87-7
தோளும் ஆகமும் தோன்ற நட்டமிட் டாடுவார் 87-4

## 28. பாச்சிலாச்சிராமத்தில் பொன்பெறாத காரணத்தால் புழுங்க அழுங்கி, 'இவரலா தில்லையோ பிரானார்' என்று ஏசினதுபோலப் பாடியது

ஏசின அல்ல இகழ்ந்தன அல்ல எம்பெருமான் 14-12

## 29. பொன்னும் போகமும் விரும்பிக் கேட்டதும், தரப்பெற்றதும்

['வேண்டுகோள்' என்னும் தலைப்பு 141 பார்க்க]

## 30. ஆறைமேற்றளி தரிசித்த பின்பு திருஇன்னம்பர் தரிசித்துப் புறம்பயம் தொழப்போந்தார் என்பது

ஆறைமேற்றளி நின்றும் போந்து வந்து இன்னம்பர்த் தங்கினேமை யும், *இன்ன தென்றிலர் ஈசனார், எழு நெஞ்சமே...புறம்பயந் தொழப் போதுமே 35-1

## 31. கூடலையாற்றூருக்குப் போகும் வழியை இறைவன் காட்டிய விவரம்

**i. வழியிற் போந்த அதிசயம்:**

கூடலையாற்றூரில் அடிகள், அத்தன், அந்தணன், அழகன், அறவன், ஆதி, ஆர்வன், ஆலன், ஐயன்—இவ்வழி போந்த அதிசயம் அறியேனே 85

**ii. வழிவந்தபோது, எங்கு, எங்ஙனம், யாருடன் இறைவர் வந்தார் என்பது**

†உமையோடும்...வழிபோந்த அதிசயம் அறியேனே 85-1, 5
ஏந்திழையாளோடும்...வழிபோந்த அதிசயம் அறியேனே 85-7
குறள்படை யதனோடும்...வழிபோந்த அதிசயம் அறியேனே 85-8
கூடலையாற்றூரில் கொடியிடை யவளோடும் ஆடல் உகந்தானே 85-10
கூடலையாற்றூரில்...வழிபோந்த அதிசயம் அறியேனே 85
கூர்நுனை மழுவேந்தி...வழிபோந்த அதிசயம் அறியேனே 85-3
‡கோலம துருவாகி...வழிபோந்த அதிசயம் அறியேனே 85-9
சோதிய துருவாகி...வழிபோந்த அதிசயம் அறியேனே 85-5
பாவையொடும் உடனே...வழிபோந்த அதிசயம் அறியேனே 85-2, 4-9
பேய்க்கணமுஞ் சூழ...வழிபோந்த அதிசயம் அறியேனே 85-8
பொடியணி திருமேனி...யோடும் வழிபோந்த அதிசயம் அறியேனே 85-1
மங்கையொடும் உடனே...வழிபோந்த அதிசயம் அறியேனே 85-3, 6, 8

---

* கவனித்து இன்ன இடத்துக்குப் போ என்று குறிப்பித்தாரில்லை.

† தேவியுடன் பெருமான் வந்ததைப் பாடல்தோறும் குறிக்கின்றாராதலின் மறையவர் கோலத்துடன் சிவபிரான் வரத், தேவியார் அவருடன் பார்ப்பனிக் கோலத்துடன் வந்தனர் போலும். 'வடிவுடை மழுவேந்தி மதகரி உரிபோர்த்து' முதலிய பிற காட்சிகளைத் தாம் மறைந்த பின் சுந்தரருக்குக் காட்டினர் போலும்.

‡ கோலம் – வேதியர் கோலம்.

## 32. தில்லையைத் தரிசித்ததும், *பேரூரின் பெருமையைத் தில்லைவாழ் அந்தணர்க்கு ஆரூரர் எடுத்துரைத்ததும்



## 33. காஞூட்டுமுள்ளூரிற் கண்டு தொழுதது



---

* பேரூரர் பெருமானை........சிற்றம்பலத்தே பெற்றாம்—என்று பேரூரைத் தில்லைப்பதிகத்திற் சிறப்பித்ததென்னை எனத் தில்லைவாழ் அந்தணர்கள் சுந்தரரைக் கேட்டார்கள். அதற்கு நம்பிகள் தில்லையிற் போலவே பேரூரிலும் பெருமான் ஆனந்த நடனம் புரிந்தருளுகின்றார்—என விடை கூறினர்.

(தில்லைவாழ் அந்தணர்) "நம்பிபே ரூர்ச்சிறப்ப நயந்தெடுத்த தென்?" என்றார்; மாண்ட குணத் தந்தணர்கள் வினவுதலும் வன்றொண்டர் நீண்டமகிழ்வினராகி நிலைமையவர்க் கருள்செய்வார், ஈண்டு நடம் புரிவதுபோல் எம்பிரான் †போதிவனத் தாண்டுமன வரதமுநல் லானந்த நடம்புரியும்" —பேரூர்ப் புராணம், அழகிய திருச்சிற்றம்பலப் படலம், 2, 3

இதை உணர்ந்த தில்லைவாழ் அந்தணர்கள் பேரூருக்குச் சென்று பெருமானை வணங்கினர்.

† போதி வனம் - பேரூர்.

## 34. (1) திருமுதுகுன்றத்தில் (பரவையின் பொருட்டுப்) பொன்வேண்டிப் பெற்றதைத் திருவாரூர்க் குளத்தில் எடுத்தது

இவள் வாடுகின்றாள், ஐயா தந்தருளாய் அடியேன் இட்டளங்
கெடவே 25-5
உம்பரும் வானவரும் உடனே நிற்கவே எனக்குச் செம்பொனைத்
தந்தருளித் திகழும் முதுகுன்றமர்ந்தீர் 25-2
பரவை குணங்கொண்டிருந்தாள் முகப்பே, அங்கணனே அருளாய்
அடியேன் இட்டளங் கெடவே 25-4
பரவையிவள் தன்முகப்பே அடிகேள் தந்தருளீர் அடியேன்
இட்டளங் கெடவே 25-6
பரவையிவள் தன்முகப்பே அர்த்தனனே யருளாய் அடியேன்
இட்டளங் கெடவே 25-7
பரவையிவள் தன்முகப்பே அரசே தந்தருளாய் அடியேன்
இட்டளங் கெடவே 25-8
பரவையிவள் தன்முகப்பே என்செய்த வாறடிகேள் அடியேன்
இட்டளங் கெடவே 25-1
பரவையிவள் தன்முகப்பே கூத்தா தந்தருளாய் கொடியேன்
இட்டளங் கெடவே 25-9
பரவையிவள் வாடாமே அத்தா தந்தருளாய் அடியேன்
இட்டளங் கெடவே 25-3
பரவையிவள் வாடுகின்றாள் எம்பெருமான் அருளீர் அடியேன்
இட்டளங் கெடவே 25-2

### (2) பரவைக்குச் சிவபிரான் ஏன் உதவினர் என்பது

[நகைச்சுவைக் காரணம்]

*முன்றான் கடல் நஞ்சம் உண்ட அதனாலோ பின்றான் பரவைக்
குபகாரம் செய்தாயோ 32-2

## 35. திருக்கோலக்காவினில் இறைவனைக் காணப்பெற்றது

கோலக் காவினிற் கண்டுகொண்டேனே 62

## 36. குருகாவூரில் தமது கொடிய பசிதீர உணவுபெற்றது

ஆவியைப் போகாமே தவிர்த்தென்னை ஆட்கொண்டாய் 29-2
இத்தனை யாமாற்றை அறிந்திலேன் எம்பெருமான் 29-1
சாந்தனை வருமேலுந் தவிர்த்தென்னை ஆட்கொண்ட வேந்தனே 29-7
பாடுவார் பசிதீர்ப்பாய் 29-3

---

* இது ஒரு நகைச்சுவைக் காரணம் போலும். தலைப்பு 146-67 பார்க்க.

போர்த்தனை தரியாமே 29-7
*வெப்பொடு †பிணியெல்லாம் தவிர்த்தென்னை ஆட்கொண்டாய் 29-4

## 37. திருக்கச்சூரைத் தரிசிக்கத் தாம் விரும்பியதும், திருக்கச்சூரில் இறைவன் பலி ஏற்று உணவளித்ததும்

i. கச்சூர் ஆலக்கோயில் அம்மானை உன்ன முன்னும்
மனத்தாரூரன் 41-10

ii. ‡கதுவாய்த் தலையிற் பலிநீ கொள்ளக் கண்டால் அடியார்
கவலாரே, அதுவா ஆமாறிதுவோ கச்சூர் ஆலக்கோயில்
அம்மானே 41-1

iii. காதல் செய்து களித்துப் பிதற்றிக் கடிமா மலரிட் டுனை எத்தி,
ஆதல் செய்யும் அடியார் இருக்க ஐயங்கொள்வ தழகிதே,
ஓதக் கண்டேன் உன்னை மறவேன் உமையாள் கணவா!
எனையாள்வாய்...கச்சூர் ஆலக்கோயில் அம்மானே 41-9

## 38. ஓணகாந்தன் தளியில் பொன் வேண்டிப் பாடினது

எம்மைப் பெற்றால் ஏதும் வேண்டீர், ஏதுந் தாரீர், ஏதும் ஓதீர்...
உம்மை அன்றே எம்பெருமான் 5-7
கையில் ஒன்றும் காணம் இல்லைக் கழலடிதொழுது உய்யின்
அல்லால்...உய்யுமாறென் றருளிச் செய்யீர் 5-1
தேடித் தேடித் திரிந்தெய்த்தாலும் சித்தம் என்பால் வைக்கமாட்டீர்
ஓடிப்போகீர் பற்றுந் தாரீர்! ஓணகாந்தன் தளியுளீரே 5-5
மெய்ம்மை சொல்லி ஆளமாட்டீர் மேலை நாளொன் றிடவும் கில்லீர் 5-7

## 39. திருவொற்றியூரைச் சார்ந்ததும், இறைவன் திருவருளால் சங்கிலியாரை மணந்ததும்

ஓர்ந்தனன் ஓர்ந்தனன் உள்ளத்துள்ளே நின்ற ஒண்பொருள்,
சேர்ந்தனன் சேர்ந்தனன் சென்று திரு வொற்றியூர் புக்குச்
சார்ந்தனன் சார்ந்தனன் சங்கிலிமென் தோள் தடமுலை
ஆர்ந்தனன் ஆர்ந்தனன் ஆமாத்தூர் ஐயன் அருளதே 45-4
நொய்யேனைப் பொருட்படுத்துச் சங்கிலியோ டெனைப்
புணர்த்த தத்துவனே 51-11

---

* வெப்பு - வெயிலின் கொடுமை.

† பிணி - பசிப்பிணி.

‡ இன்றும் என்பொருட்டுப் பலி ஏற்பதாயிற்றே எனச் சுந்தரர் வருந்துகின்றார்.

## 40. (1) திருவாரூரைவிட்டுப் பிரிந்திருக்க முடியவில்லை என்பதும்; (2) திருவாரூரில் அவருக்கு இருந்த பற்றும்

### (1)

இங்குலக்கு முடற்பிறந்த அறிவிலியேன் செறிவின்றி, எங்குலக்கப்
பிரிந்திருக்கேன் என்னாரூர் இறைவனையே 51-3
இருவர் நினைந்தினிதேத்தப் பெற்றுளளும் பெருமையனைப்
பெரிதடியேன் கையகன்றிட் டெற்றுளனாய்ப் பிரிந்திருக்கேன்
என்னாரூர் இறைவனையே 51-9
சங்கிலியோ டெனைப்புணர்த்த தத்துவனைச் சழக்கனேன்
எங்குலக்கப் பிரிந்திருக்கேன் என்னாரூர் இறைவனையே 51-11
சடையானை விடையானை அடைவின்றி என்செயநான் பிரிந்
திருக்கேன் என் ஆரூர் இறைவனையே 51-7
செப்பரிய அயனொடுமால் சிந்தித்தும் தெரிவரிய
அப்பெரிய திருவினையே அறியாதே அருவினையேன்
ஒப்பரிய குணத்தானை இணையிலியை அணைவின்றி
எப்பரிசு பிரிந்திருக்கேன் என் ஆரூர் இறைவனையே 51-5
தேவர் குலக்கொழுந்தை மறந்திங்ஙனம் நான், என்னறிவான்
பிரிந்திருக்கேன் என் ஆரூர் இறைவனையே 51-8
பத்திமையும் அடிமையையும் கைவிடுவான் பாவியேன், *பொத்தி
னநோ யதுவிதனைப் பொருளறிந்தேன் போய்த்தொழுவேன்,
...எத்தனைநாள் பிரிந்திருக்கேன் என் ஆரூர் இறைவனையே 51-1
பரவையைத் தந்தாண்டானை மதியில்லா ஏழையேன் பிரிந்
திருக்கேன் என்னாரூர் இறைவனையே 51-10
புரமெரித்த தன்மையனை முன்னாக நினையாத மூர்க்கனேன்
ஆக்கை சுமந்தென்னாகப் பிரிந்திருக்கேன் என்னாரூர்
இறைவனையே 51-6
மான்மருவுங் கையானை எங்ஙனம் நான் பிரிந்திருக்கேன்
என்னாரூர் இறைவனையே 51-4
முத்தினை மாமணிதன்னை வயிரத்தை மூர்க்கனேன் எத்தனைநாள்
பிரிந்திருக்கேன் என் ஆரூர் இறைவனையே 51-1
வளர்சடையெம் ஆரமுதை எவ்வணம் நான் பிரிந்திருக்கேன்
என்னாரூர் இறைவனையே 51-2

### (2)

சித்தமாக நினைந்துள்ளம் ஏத்தித் தொழும் அத்தன் அம்பொற்
கழல் அடிகள் ஆரூரரைச் சித்தம் வைத்த புகழ்...ஊரன் 37-11

* நோய் பொதிந்த உடற்கிடமாய பிறவி.

41. கண்ணிழந்ததும், நோயுற்றதும், கண்ணை மறைப்பித்தாய், கண் ஒளியைத் தா, ஊன்றுகோலாவது தா, உற்றநோயைத் தீர்த்தருள் என வேண்டுவது; கண்ணிழந்த நிலையில் முறையீடு—அந்த நிலையிலும் தலங்களைத் தேடிச்சென்றது

அத்தா என்னிடர் ஆர்க்கெடுத் துரைக்கேன் 54-3
அழுக்குமெய் கொடுன் திருவடி யடைந்தேன் அதுவுநான் படப்பால
தொன்றானால், பிழுக்கை வாரியும் பால்கொள்வர் அடிகேள்
பிழைப்பனாகிலும் திருவடிப் பிழையேன், வழுக்கி வீழினும்
திருப் பெயரல்லால் மற்றுநான் அறியேன் மறுமாற்றம்,
ஒழுக்க என்கணுக் கொருமருந் துரையாய் ஒற்றியூரெனும்
ஊருறைவானே 54-1
*ஈன்று கொண்டதோர் சுற்றமொன் றன்றால் யாவராகிலென்
அன்புடையார்கள், தோன்றநின் றருள் செய்தளித்திட்டாற்
சொல்லுவாரை யல்லாதன சொல்லாய், மூன்று கண்ணுடை
யாய் அடியேன் கண் கொள்வதே கணக்கு வழக்காகில்,
ஊன்றுகோல் எனக்காவதொன் றருளாய் ஒற்றியூரெனும்
ஊருறைவானே † 54-4
உடம்பில் அடுநோயால் கருத்தழிந்து உனக்கே பொறையானேன் 70-2
உனைநான் மறவேனேல் உற்றநோய் உறுபிணி தவிர்த்தருளாய்
ஒற்றியூரெனும் ஊருறைவானே 54-7
உறவிலேன் உனை அன்றி மற்றடியேன் ஒருபிழை பொறுத்தால்
இழிவுண்டோர் 70-6
என்செய்வான் அடியேன் எடுத்துரைக்கேன் 54-2
கட்டனேன் பிறந்தேன் உனக்காளாய்க் காதற் சங்கிலி காரண
மாகப், †பெட்டனாகிலும் திருவடிப் பிழையேன், பிழைப்ப
னாகிலும் திருவடிக்கடிமை ஒட்டினேன், ‡எனைநீ செய்வ
தெல்லாம் ஒற்றியூரெனும் ஊருறைவானே 54-2

---

* கருத்துரை: நாம் படைத்ததால் நமக்குச் சுற்றம் இவன் என்னும் கணக்கு ஒன்று மாத்திரம் அன்று; யாராயிருந்தாலும் அன்புள்ளவரா யிருந்தால் நம்மாட்டு அன்புள்ளவரே நமக்குக் கணக்கு என்றுநீ கொண்டு அவர் எதிரில் நீ தோன்றி அவருக்கு அருள் செய்கின்றாய்; அருள் பெற்ற அந்தப் பாக்கியத்தால் அவர் உன்னைப் புகழ நீ அவரைக் கடுஞ் சொல் ஒன்றும் சொல்லாமல் பொறுத்தருளுகின்றாய்; இது உன் தன்மை; உன் கருணை அப்படியிருக்க, மூன்று கண்ணை உடைய நீ என் கண்ணைப் பிடுங்கிக்கொண்டாயே; இதுதான் நீதிக் கணக்கு வழக்கு என்றால் எனக்குத் தக்கதொரு ஊன்றுகோலைத் தந்தருள்—என்ற படி.

† பெட்டன் - பொய்யன். ‡ எனை - என்னை - யாது.

கண்ணிலேன் உடம்பில் லடுநோயால் கருத்தழிந்து
உனக்கே பொறையானேன், அண்ணலே! எனை அஞ்சல்
என்றருளாய் ஆர் எனக்குற வமரர்கள் ஏறே 70-2

கூடினாய் மலைமங்கையை நினையாய் கங்கை ஆயிரமுகமுடையாளைச்
சூடினாய் என்று சொல்லிய புக்கால் தொழும்பனேனுக்கும்
சொல்லலுமாமே 54-8

திருமுல்லைவாயில் தேடியான் திரிதர்வேன் கண்ட பைம்பொனே 69-8

படுதுயர் களையாய் பாசுபதா பரஞ்சுடரே 69

*பெற்றிருந்து பெருதொழிகின்ற பேதையேன் பிழைத்திட்டதை
அறியேன்...முற்றும் நீஎனை முனிந்திட அடியேன் கடவதென் 54-7

பேதையேன் பிழைத்திட்டதை அறியேன் 54-7

†மகத்திற் புக்கதோர் சனிஎனக் கானாய் மைந்தனே மணியே
மணவாளா!, அகத்திற் பெண்டுகள் நானொன்று சொன்னால்
அழையேல் போ குருடா எனத் தரியேன், முகத்திற் கண்
இழந்தெங்ஙனம் வாழ்கேன் முக்கண் மூறையோ மறையோதீ!
உகைக்கும் தண்கடல் ஓதம்வந்துலவும் ஒற்றியூர் எனும்ஊர்
உறைவானே 54-9

மதியிலேன் உடம்பில் அடுநோயால் மயங்கினேன், மணியே!
மணவாளா!......திருவாவடு துறையுள், அதிபனே! எனை
அஞ்சலென் றருளாய் ஆர்எனக்குற வமரர்கள் ஏறே 70-4

மற்றுத் தேவரை நினைந்துனை மறவேன் நெஞ்சினாரொடு
வாழவுமாட்டேன் 54-7

‡மானை நோக்கியர் கண்வலைப்பட்டு வருந்தியானுற்ற வல்வினைக்
கஞ்சித், தேனையாடிய கொன்றையினாய் உன்சீலமும் குணமும்
சிந்தியாதே, நானும் இத்தனை வேண்டுவதடியேன்,
§உயிரொடு் நரகத் தழுந்தாமை, ஊனம் உள்ளன தீர்த்தருள்
செய்யாய் ஒற்றியூர் எனும் ஊருறைவானே 54-6

முற்றும் நீஎனை முனிந்திட அடியேன் கடவதென் 54-7

---

* உன் அருளைப் பெற்றிருந்த நான் இப்போது அந்த அருளைப் பெறவில்லையே; கண்ணை இழக்கும்படியான அத்துணைப் பெரும்பிழை செய்ததை நான் அறியேன்.

† **மகத்துச்சனி:** ஒப்புமைப் பகுதி, பக்கம் சகூ பாட்டு 54-9-ன் கீழ்க் குறிப்பைப் பார்க்க.

‡ **மானை நோக்கியர்:** கயிலையில் இருந்த கமலினி, அநிந்திதையார், அவர்தம் கண்வலைப்பட்டதனால் வினைசூழ, நானாக வகுத்தார் இறைவர் இவரை. (தலைப்பு 146-3 பாடல் 3-2 பார்க்க)

§ **உயிரொடு நரகத் தழுந்தல்:** கண்ணிழந்து வாழ்தல் நரக வேதனையாம் என்றபடி.

*வழித்தலைப் படுவான் முயல்கின்றேன் †உன்னைப்போல என்னைப்
பாவிக்கமாட்டேன், சுழித்தலைப்பட்ட நீரதுபோலச் சுழல்கின்றேன்
சுழல்கின்றதென் உள்ளம், ‡கழித்தலைப்பட்ட நாயதுபோல
ஒருவன் கோல்பற்றிக் கறகற இழுக்கை, ஒழித்துநீ யருளாயின
செய்யாய் ஒற்றியூரெனும் ஊருறைவானே 54-5
வாடிநீயிருந் தென்செய்தி மனனே வருந்தி யானுற்ற வல்வினைக்
கஞ்சி, ஊடினால் இனி ஆவதொன் றுண்டே ஒற்றியூர்
எனும் ஊர் உறைவானே 54-8

## 42. (i) வடதிருமுல்லைவாயிலில் 'படுதுயர் களையாய்' என வேண்டினர்

திருமுல்லைவாயிலாய்! வாயினால் உன்னைப் பரவிடும் அடியேன்
படுதுயர் களையாய் பாசுபதா பரஞ்சுடரே 69-1

## (ii) கண்ணிழந்த காரணம்

ஒற்றிமா நகருடையாய் சங்கிலிக்கா என்கண் கொண்ட பண்ப 69-3
காதற் சங்கிலி காரணமாகப் பெட்டன் 54-2

## 43. வெண்பாக்கத்தில் முறையீடும், ஊன்றுகோல் பெற்றதும்

இடையறியேன் தலையறியேன் எம்பெருமான் சரணமென்பேன்
அடையுடையன் நம்மடியான் என்றவற்றைப் பாராதே
விடையுடையான் விடநாகன் வெண்ணீற்றன் புலியின்தோல்
உடையுடையான் எனையுடையான் உளோம்போகீர்
என்றானே 89-2
கண்மணியை மறைப்பித்தாய் இங்கிருந்தா யோஎன்ன
ஒண்ணுதலி பெருமானார் உளோம் போகீர் என்றானே 89-6
கார் நிலவு மணிமிடற்றீர் இங்கிருந்தீ ரேயென்ன,
ஊர் அரவம் அரைக்கசைத்தான் உளோம்போகீர் என்றானே 89-7
செய்வினையொன் றறியாதேன் திருவடியே சரணென்று
பொய்யடியேன் பிழைத்திடினும் பொறுத்திடநீ
வேண்டாவோ, பையரவா இங்கிருந்தா யோஎன்னப்

---

* திருவாரூருக்குப் போவதற்கு மேற்கொண்ட பயணத்தை நிறுத்த மாட்டேன்; அங்குப் போகவேண்டிய வழியையே தொடர்ந்து செல்ல முயல்கின்றேன்.

† உன்னை நான் தியானித்துப் பொருட்படுத்துவதுபோல என்னை நான் பொருட்படுத்துவதில்லை.

‡ கழித்தலைப்பட்ட நாய் - ஒதுக்கப்பட்ட நாய்; கோலின் நுனியைக் கௌவிச் செல்லும் நாய்—எனலுமாம்.

பரிந்தென்னை, உய்ய அருள் செய்ய வல்லான் உளோம்
போகீர் என்றானே 89-3
சேயிழையோ டூனுகி, நம்பியிங்கே இருந்தீரே என்று நான்
கேட்டலுமே, உம்பர் தனித் துணை எனக்கு உளோம்
போகீர் என்றானே 89-4
திருஒற்றி யூரிடங்கொண் டிருந்தபிரான் உளோம் போகீர்
என்றானே 89-8
துன்னியிரு பாலடியார் தொழுதேத்த அடியேனும், உன்னதமாய்க்
கேட்டலுமே உளோம் போகீர் என்றானே 89-5
பிழையுளன பொறுத்திடுவர் என்றடியேன் பிழைத்தக்கால்
பழியதனைப் பாராதே படலமென்கண் மறைப்பித்தாய்
குழைவிரவு வடிகாதா கோயிலுளா யோஎன்ன
உழையுடையான் உள்ளிருந் துளோம் போகீர் என்றானே 89-1
பொன்னவிலுங் கொன்றையினாய் போய் மகிழ்க்கீழ் இருஎன்று
சொன்ன எனைக் காணாமே சூளறவு மகிழ்க்கீழே
என்னவல்ல பெருமானே இங்கிருந்தா யோஎன்ன
ஒன்னலரைக் கண்டாற்போல் உளோம் போகீர் என்றானே 89-9
மான் றிகழுஞ் சங்கிலியைத் தந்துவரு பயன்களெல்லாம்
தோன்ற அருள் செய்தளித்தாய் என்றுரைக்க உலகமெலாம்
ஈன்றவனே வெண்கோயில் இங்கிருந்தா யோஎன்ன
ஊன்றுவதோர் கோலருளி உளோம் போகீர் என்றானே 89-10

## 44. காஞ்சியில் ஒருகண் பெற்றது - அல்லல் ஒருவாறு தீரப்பெற்றது - ஆண்டவன் அருளை வியந்தது

அல்லல் தீர்த்தருள் செய்ய வல்லானை...காணக் கண்
அடியேன் பெற்றவாறே 61-5
உற்றவர்க் குதவும் பெருமானை...காணக் கண் அடியேன்
பெற்றவாறே 61-2
கம்பனெம்மானைக் காணக்கண் அடியேன் பெற்றவாறே 61
*கள்ளக் கம்பனை எங்கள் பிரானைக் காணக் கண் அடியேன்
பெற்றவாறே 61-10
காணக் கண் அடியென் பெற்றதென்று...கம்பன் எம்மானை
ஆரூரன் நற்றமிழ் இவை ஈரைந்து 61-11
நண்ணினார்க் கென்றும் நல்லவன் தன்னை...காணக்கண்
அடியேன் பெற்றவாறே 61-7
*நல்ல கம்பனை எங்கள் பிரானைக் காணக் கண் அடியேன்
பெற்றவாறே 61-5

---

* தலைப்பு 161-18 'கச்சி' என்பதன் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

பந்தித்த வினைப்பற் றறுப்பானை காணக்கண் அடியேன்
பெற்றவாறே 61-8
பற்றினார்க் கென்றும் பற்றவன் தன்னைக்...காணக் கண் அடியேன்
பெற்றவாறே 61-2
பெரியஎம் பெருமான் என்றெப்போதும் கற்றவர் பரவப்
படுவானைக் காணக் கண் அடியேன் பெற்றதென்று 61-11
*பெரிய கம்பனை எங்கள் பிரானைக் காணக் கண் அடியேன்
பெற்றவாறே 61-3

## 45. இடது கண்பெற்ற ஆரூரர், திருஆரூரை நினைந்து பாடியது

ஆதியை மாதினொடும் ஆரூர்புக்கு என்றுகொல் எய்துவதே 83-9
ஆரூரை நன்னெடுங் காதன்மையால் நாவலர்கோன் ஊரன்
பன்னெடுஞ் சொன்மலர் கொண்டிட்டன பத்தும் 83-10
(தென்திரு)வாரூர் புக்கு—இடுபலி கொள்ளியை நான் என்றுகொல்
எய்துவதே 83-5
,, —எண்ணிய கண்குளிர என்றுகொல் எய்துவதே 83-9
,, —எந்தை பிரானாரை என்றுகொல் எய்துவதே 83-1
,, எல்லை மிதித்தடியேன் என்றுகொல் எய்துவதே 83-4
,, என்பொனை என்மணியை என்றுகொல் எய்துவதே 83-7
,, என்றன் மனங்குளிர என்றுகொல் எய்துவதே 83-2
,, என்னுயிர்க் கின்னமுதை என்றுகொல் எய்துவதே 83-3
,, —ஏழுலகாளியை நான் என்றுகொல் எய்துவதே 83-6
,, ஏறணி எம்மிறையை என்றுகொல் எய்துவதே 83-8
நின்ற வினைக்கொடுமை நீங்கத்...தென் திருவாரூர்புக்கு...என்று
கொல் எய்துவதே 83-2
மூந்தி எழும் பழைய வல்வினை மூடாமுன், சிந்தை பராமரியாத்
தென் திருவாரூர்புக்கு...என்றுகொல் எய்துவதே 83-1
முன்னை முதற்பிறவி மூதறியாமையினால், பின்னை நினைந்தனவும்
பேதுறவும் ஒழியத், தென்திருவாரூர்புக்கு...என்றுகொல்
எய்துவதே 83-3

## 46. நெல்வாயில் (அரத்துறை) தரிசித்தபோது ஒரு கண் பார்வைதான் இருந்தது

எற்றே ஒரு கண்ணிலன்...நெல்வாயில் அரத்துறை நின்மலனே 3-3

---

* பெரிய கம்பன்-கள்ளக் கம்பன்-நல்ல கம்பன்—விவரம் 'தலங்கள்' என்னும் தலைப்பில் 18-'கச்சி' பார்க்க.

## 47. திருவாவடுதுறையைத் தரிசித்து (ஒரு) கண் இலாது வேதனைப்படுதலையும், நோயால் உடம்பு வேதனைப் படுதலையும் கூறித் துதித்தார்

உடம்பில் அடுநோயால் மயங்கினேன் 70-4
உறவிலேன் உனையன்றி மற்றடியேன் ஒருபிழை பொறுத்தால்
இழிவுண்டே 70-6
எனை அஞ்சலென் றருளாய் ஆரெனக்குறவு அமரர்கள் ஏறே 70
கண்ணிலேன் உடம்பில் அடுநோயால் கருத்தழிந்து உனக்கே
பொறையானேன் 70-2

## 48. திருத்துருத்தியில் வினை—பிணி—நோய் நீங்கப்பெற்றது

அம்மைநோய் இம்மையே ஆசறுத்தானை 74-8
அருவினை யுள்ளன ஆசறுத்தானை 74-4
இழித்தநோய் இம்மையே ஒழிக்க வல்லானை 74-6
என்னைநான் மறக்குமா றெம்பெருமானை என் உடம்பு அடும்பிணி
இடர்கெடுத்தானை 74-1
உலகறி பழவினையற ஒழித்தானை 74-7
உற்றநோய் இற்றையேயுற வொழித்தானை 74-5
தொடர்ந்தடும் கடும்பிணித் தொடர்வறுத்தானை 74-3
பழவினை யுள்ளன பற்றறுத்தானை 74-2
மேலைநோய் இம்மையே வீடுவித்தானை 74-9

## 49 ஆரூர்ப் பரவையுண் மண்டளியில் மற்றைக் கண்ணையும் தரும்படி வேண்டுதல்

கண்டுகொண்டார் ஐவர் காக்கிலும், நாவாயால் உன்னையே நல்லன
சொல்லுவேற்(கு), ஆவா*என் பரவையுண் மண்டளி அம்மானே 96-1
கண்தனைக் கொண்டிட்டுக் காட்டாயே—பரவையுண் மண்டளி
அம்மானே 96-7
நாமாறு துன்னையே நல்லன சொல்லுவார், போமாறென்
புண்ணியா ..இடுகாடு உகந்து ஆடுவாய்க்கு ஆமாறென்
பரவையுண் மண்டளி அம்மானே 96-3
நெஞ்சேர நின்னையே யுள்கி நினைவாரை, அஞ்சேலென் பரவையுண்
மண்டளி அம்மானே 96-5
நோக்குவே னுன்னையே நல்லன நோக்காமைக்,
காக்கின்றார் கண்டு கொண்டார் ஐவர் காக்கிலும்
வாக்கென்னும் மாலைகொண் டுன்னையென் மனத்
தார்க்கின்றேன் பரவையுண் மண்டளி யம்மானே 96-4

---

* என் - என்பாயாக. ஆவா என்று அபயம் கூறுக.

## 50. ஆரூர்ப் பெருமானை இரு கண்ணாலும் காண்பதற்கு இல்லையே என வருந்தி ஏசறவால் தமது காதலைக் காட்டும் திருப்பதிகம் கைக்கிளைத் தூது வகையிற் பாடியது

அன்னப் பெடைகாள்! கிள்ளைகாள்! குயில்காள்! குருகுகாள்!
கொண்டல்காள்! சக்ரவாளப் பேடைகாள்! நாரைகாள்!
பூவைகாள்! வண்டுகாள்!
ஆரூரர்க்குக் கலைகள் சோர்கின்றதும், கனவளை கழன்றதும்,
முலைகள் பீர்கொண்டதும் மொழிய வல்லீர்களே 37-5
ஆரூரர்க்குப் பற்றுமற் றின்மையும் பாடுமற்றின்மையும், உற்றுமற்
றின்மையும் உணர்த்த வல்லீர்களே 37-8
ஆரூரர்க்குப் பானலங் கொண்டவெம் பணைமுலை பயந்துபொன்,
ஊனலங் கொண்டதும் உணர்த்தவல்லீர்களே 37-7
ஆரூரர்க்கு வக்ரம் இல்லாமையும் வளைகள் நில்லாமையும், உக்ரம்
இல்லாமையும் உணர்த்தவல்லீர்களே 37-4
ஆரூரர்க்கு வாழுமாறும் வளைகழலுமாறும் எனக் கூழுமாறும்
இவை உணர்த்தவல்லீர்களே 37-3
ஆரூரரைக் கண்டவாறும் காமத்தீக் கனன்றெரிந்து மெய், உண்ட
வாறும் இவை உணர்த்தவல்லீர்களே 37-6
ஆரூரரைப் பாவி நாடும்மதும், பாடிநாடும்மதும், உருகி நாடும்மதும்
உணர்த்தவல்லீர்களே 37-9
ஆரூரரைப் பருகுமா றும்பணிந் தேத்துமா றுந்நினைந், துருகுமா
றும்மிவை உணர்த்தவல்லீர்களே 37-1
ஆரூரரைப் பாடுமாறும் பணிந்தேத்துமா றுங்கூடி, ஊடுமாறும்
இவை உணர்த்தவல்லீர்களே 37-10
ஆரூரரை மறக்க கில்லாமையும் வளைகள் நில்லாமையும், உறக்க
மில்லாமையும் உணர்த்தவல்லீர்களே 37-2

## 51. மற்றைக் கண் பார்வையையும் பெறவேண்டி, ஆரூர் மூலட்டானத்தில் பாடினதும் (கண் பெற்றதும்)

இருந்தும் நின்றும் கிடந்தும் உம்மை இகழாதேத்துவோம், வருந்தி
வந்தும் உமக்கொன் றுரைத்தால் வாழ்ந்து போதீரே 95-10
இழியாக் குலத்திற் பிறந்தோம் உம்மை இகழாதேத்துவோம்,
பழிதானாவ தறியீர் அடிகேள் பாடும் பத்தரோம்,
வழிதான் காணாது அலமந்திருந்தால் வாழ்ந்து போதீரே 95-8
என்றும் முட்டாப் பாடும் அடியார் தங்கண் காணாது, குன்றின்
முட்டிக் குழியில் விழுந்தால் வாழ்ந்து போதீரே 95-3
சந்தம் பலவும் பாடும் அடியார் தங்கண் காணாது,
வந்தெம் பெருமான் முறையோ என்றால் வாழ்ந்துபோதீரே 95-5

தனத்தா லின்றித் தாந்தாம் மெலிந்து தங்கண் காணாது, மனத்தால்
வாடி அடியார் இருந்தால் வாழ்ந்து போதீரே 95-6
பாரூர் அறிய என்கண் கொண்டீர் நீரே பழிபட்டீர், வாரூர்
முலையாள் பாகங்கொண்டீர் வாழ்ந்து போதீரே 95-11
பேயோடேனும் பிரிவொன் றின்னா தென்பர் பிறரெல்லாம்
காய்தான் வேண்டிற் கனிதா னன்றோ கருதிக்கொண்டக்கால்
நாய்தான் போல நடுவே திரிந்தும் உமக்காட் பட்டோர்க்கு
வாய்தான் திறவீர் திருவாரூரீர் வாழ்ந்து போதீரே 95-9
மாயங்காட்டிப் பிறவிகாட்டி மறவா மனங்காட்டிக்,
காயங் காட்டிக் கண்ணீர் கொண்டால் வாழ்ந்து போதீரே 95-7
மீளா அடிமை உமக்கே ஆளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போல் உள்ளே கனன்று முகத்தால் மிகவாடி
ஆளா யிருக்கும் அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவாரூரீர் வாழ்ந்து போதீரே
விற்றுக்கொள்வீர் ஒற்றியல்லேன் விரும்பி யாட்பட்டேன்
குற்றம் ஒன்றும் செய்ததில்லை கொத்தை யாக்கினீர்
எற்றுக் கடிகேள் என்கண் கொண்டீர் நீரே பழிபட்டீர்
மற்றைக்கண் தான் தாராதொழிந்தால் வாழ்ந்து போதீரே 95-2

## 52. தமக்காக இறைவன் தூது சென்றது

அடியேற்கு எளிவந்த தூதனை 68-8
தூதனை என்றனை யாள் தோழனை நாயகனை 84-9

## 53. தமக்குத் தோழர், நேசர், எளிவந்தவர், பிழைபொறுப்பவர், சிவபிரான் என்பது

அடியேற் கெளியானை 59-7
எம்மானை எளிவந்த பிரானை 59-1
என்றனை யாள் தோழனை 84-9
*என்னுடைய தோழனுமாய் யான் செய்யும் துரிசுகளுக் குடனாகி 51-10
எனக் கெளிவந்த பாவநாசனை 62-1
ஏழையேற் கெளிவந்த பிரானை 68-5
தன்னைத் தோழமை அருளித் தொண்டனேன் செய்த
துரிசுகள் பொறுக்கும் நாதனை 68-8
நேசத்தினால் என்னை ஆண்டு கொண்டார் 19-2
யான் செய்யும் துரிசுகளுக் குடனாகி 51-10

---

* 'என்னுடைய தோழனுமாய்' என்ற திருப்பாட்டின், நன்னெறியைக் கண்டுரிமை நாம் செய்வ தெந்நாளோ'—என இப்பகுதி தாயுமனாரல் 'அறிஞருரை' என்னும் தலைப்பில் எடுத்தாளப்பட்டுளது.

## 54. பரவையார் சங்கிலியார் இருவருக்கும் தமக்கும் பற்றாய பெருமான் சிவபிரான் என்றது

*பண்மயத்த மொழிப் பரவை சங்கிலிக்கும் எனக்கும்*
*பற்றாய பெருமானே மற்றாரை உடையேன்* 46-11

## 55. ஏயர்கோனுக்கு உற்றநோயை இறைவர் தீர்த்ததும், அவர் பொருட்டு பெருமழையைத் தந்ததும், தவிர்த்ததும்

*ஏத நன்னிலம் ஏயர்கோன் உற்ற இரும் பிணி தவிர்த்து* 55-3
**வையக முற்றும் மாமழை மறந்து வயலில் நீரில் மாநிலம்*
*தருகோம், உய்யக் கொள்கமற் றெங்களை என்னப்...*
*பெய்யு மாமழைப் பெருவெள்ளம் தவிர்த்துப், பெயர்த்தும்*
*பன்னிரு வேலி கொண் டருளும் . திருப்புன் கூருளானே* 55-2

## 56. மூவேந்தர் முன்னிலையில் திருப்பரங்குன்றத்திற் பாடினது

*அடிகேள் உமக்காட்செய அஞ்சுதுமென் றமரர் பெருமானை*
*ஆரூரன் அஞ்சி, முடியால் உலகாண்ட மூவேந்தர் முன்னே*
*மொழிந்தாறும் ஓர் நான்கும் ஓர் ஒன்றினையும், படியா இவை*
*கற்று வல்ல அடியார் பரங்குன்றம் மேய பரமன் அடிக்கே*
*குடியாகி...விண்முழுதாள்பவரே* 2-11

## 57. கானப்பேர் (காளையார் கோயில்) காளையைத் தரிசிக்க விரும்பியது

*என்னை மதித் தய்யும் வணம் அருளும் கண்ணுதலைக் காண்பதும்*
*என்று கொலோ கானப்பேருறை காளையையே* 84-6
*எய்துவ தென்று கொலோ கானப்பேருறை காளையையே* 84
*கண் குளிரக் கண்டுதொழப் பெறுவ தென்று கொலோ*
*அடியேன் கானப்பேருறை காளையையே* 84-1
*காண்பதும் என்று கொலோ கானப்பேருறை காளையையே* 84-6
*காணுவ தென்று கொலோ கானப்பேருறை காளையையே* 84-5
*காதலுறத் தொழுவ தென்று கொலோ அடியேன் கானப்*
*பேருறை காளையையே* 84-2
*கைதொழல் என்று கொலோ கானப்பேருறை காளையையே* 84-4

---

* பொன்னம் பலத்துறை புண்ணியன் என்பர், புயல் மறந்த கன்னன்மை தீரப் புனிற்றுக் கலிக்காமற் கன்றுபுன்கூர், மன்னு மழை பொழிந் தீரறு வேலிகொண் டாங்கவற்கே, பின்னும் மழை தவிர்த் தீராறு வேலிகொள் பிஞ்ஞகனே—கோயிற் திருப்பண்ணியர் - 54.

தொண்டர் அடித் தொழலும், சோதி இளம் பிறையும், சூதனமென்
முலையாள் பாகமும்.. புண்டரிகப் பரிசாம் மேனியும்,
கொண்டல் எனத் திகழும் கண்டமும், எண்டோளும்
கோல நறுஞ்சடைமேல் வண்ணமும் கண்குளிரக் கண்டு
தொழப் பெறுவதென்று கோலோ அடியேன் கார் வயல் சூழ்
கானப் பேருறை காளையே 84-1

## 58. திருவையாற்றில் காவிரி வெள்ளத்தைக் கடந்து நீந்த முடியாத நிலையிற் பாடினது

வெள்ளம் பரந்து நுரை சிதறி அதிர்க்கும் திரைக் காவிரிக்
கோட்டத்து, ஐயாறுடைய அடிகளோ! கதிர்க்கொள்
பசியை ஒத்தே நான் கண்டேன் உம்மைக் காணுதேன்
*†எதிர்த்து நீந்த மாட்டேனுன்...அம்மானே 77-9

## 59. ஆரூரர் சேரமானுடன் கொடுங்கோளூரில் இருந்தபோது திருவாரூர்ப் பெருமானுடைய நினைவு வர அப்போது பாடினது

ஆரூரானை மறக்கலு மாமே 59
‡ஒருரென் றுலகங்களுக் கெல்லாம் உரைக்கலாம் பொருளாயுடன்
கூடிக், காரூருங் கமழ் கொன்றை நன்மாலை முடியன்
காரிகைக் காரணமாக ஆரூரைம் மறத்தற்கரியானை
அம்மான் தன் திருப்பேர் கொண்ட தொண்டன் ஆரூரன்
அடிநாயுரை வல்லார் அமரலோகத் திருப்பவர் தாமே 59-11

---

* வெம்பசி உடையான் ஒருவனைப்போல அதிதீவிர ஆசையுடன் உன் (தலத்தைக்) கண்டேன்; ஆனல் உன் சந்நிதானத்தை அணுகி உன்னைக் காணமுடியாது நிற்கின்றேன்.

† காவிரியின் பெருக்கு எதிர்த்து நீந்தமுடியாத பெருக்காயுள்ளது, பெருமானே.

‡ காரிகை - பரவை. "பரவையைத்தந் தாண்டானை" என்றார் பிறி தோரிடத்து 51-10. இறைவன் [காரிகை] பரவையைத் தந்து தன்னை யாண்ட காரணத்தால் ஆரூரை மறத்தற்கில்லை என்றபடி.

தாம் வீற்றிருப்பதால் உலகங்களில் உள்ள ஊர்களுக்குள் ஒப்பற்ற ஊர் திருவாரூர் என்று சொல்லும்படியான (பொருளாய்) பொருளினராய் அத்தலத்தில் கூடினவராய், கொன்றை மாலை முடியினராய் உள்ள சிவபிரான் காரணமாகவும், (அவர் எனக்குத் தந்த) காரிகையார் பரவையார் காரணமாகவும், ஆரூரை மறத்தற்கரியனாகிய நான், அம்மான் (பெருமான்) பெயரை - ஆரூரன் என்னும் பெயரைக் கொண்டுள்ள தொண்டனாகிய நான், அடிநாயாகிய நான் - உரைத்த இப்பதிகத்தை ஓதவல்லார் அமரலோகத்திருப்பார் என்றபடி.

## 60. திருமுருகன் பூண்டியில் வேடுபறி

கொடுகு வெஞ்சிலை வடுக வேடுவர் விரவலாமை சொல்லித்
திடுகு மொட்டெனக் குத்திக் கூறைகொண் டாறலைக்கும்
இடம் . முருகன் பூண்டி 49-1
பசுக்களே கொன்று தின்று பாவிகள் பாவமொன் றறியார்
உசிர்க் கொலைபல நேர்ந்து நாடொறும் கூறை
கொள்ளும் இடம்.. முருகன் பூண்டி 49-3
பீறற் கூறை யுடுத்தோர் பத்திரம் கட்டி வெட்டனராய்ச், சூறைப்
பங்கியராகி நாடொறுங் கூறைகொள்ளுமிடம் முருகன்பூண்டி 49-4
முசுக்கள் போற் பலவேடர் வாழ் முருகன்பூண்டி 49-3
முடவரல்லீர் இடரிலீர்...எத்துக் கிங்கிருந்தீர் எம்பிரானிரே 49-8
முடுகு நாறிய வடுகர் வாழ் முருகன்பூண்டி மாநகர்வாய்...மங்கை
தன்னொடும் எத்துக் கிங்கிருந்தீர் எம்பிரானிரே 49-1
முருகன் பூண்டி மாநகர்வாய் இசுக்கழியப் பயிக்கங் கொண்டுநீர்
எத்துக் கிங்கிருந்தீர் எம்பிரானிரே 49-3
முருகன்பூண்டி மாநகர்வாய் இட்டபிச்சை கொண்டுண்ப
தாகில் நீர் எத்துக் கிங்கிருந்தீர் எம்பிரானிரே 49-6
முருகன்பூண்டி மாநகர்வாய் இடவ மேறியும் போவதாகில்நீர்
ஏத்துக் கிங்கிருந்தீர் எம்பிரானிரே 49-8
முருகன்பூண்டி மாநகர்வாய் இயங்கவும் மிடுக்குடைய
ராய்விடில் எத்துக் கிங்கிருந்தீர் எம்பிரானிரே 49-5
முருகன்பூண்டி மாநகர்வாய் நீர் எத்துக் கிங்கிருந்தீர் எம்பிரானிரே 49
முருகன்பூண்டி மாநகர்வாய் எல்லைக் காப்ப தொன் றில்லை
யாகில் நீர் எத்துக் கிங்கிருந்தீ ரெம்பிரானிரே 49-2
முருகன்பூண்டி மாநகர்வாய் ஏதுகாரணம், ஏதுகாவல்கொண்
டெத்துக் கிங்கிருந்தீர் எம்பிரானிரே 49-7
முருகன்பூண்டி மாநகர்வாய் ஏந்து பூண்முலை மங்கை
தன்னொடும் எத்துக் கிங்கிருந்தீர் எம்பிரானிரே 49-9
முருகன்பூண்டி மாநகர்வாய் ஏறுகால் இற்ற தில்லையாய் விடில்
எத்துக் கிங்கிருந்தீர் எம்பிரானிரே 49-4
மோதி வேடுவர் கூறை கொள்ளும் முருகன்பூண்டி 49-7
மோறை வேடுவர் கூடிவாழ் முருகன்பூண்டி 49-4
வில்லைக் காட்டி வெருட்டி வேடுவர் விரவலாமை சொல்லிச்,
கல்லினல் எறிந்திட்டும் மோதியுங் கூறைகொள்ளுமிடம்
முருகன்பூண்டி 49-2

## 61. வேடனாக வந்து இறைவன் உதவினது

*செங்கண் வேடனாய் என்னொடும் வந்து மருவினான் தனை 57-6

* கோயமுத்தூர் ஜில்லா அடியனூர் என்னும் தலத்தின் அருகே சுந்தரர் காட்டுவழியே செல்லும்போது, இறைவர் வேடனாக எழுந்

## 62 முதலை உண்ட பிள்ளையை மீள்விக்கப் பாடியது

*காணாத கண்கள் காட்டவல்ல கறைக் கண்டனே 92-3
கூத்தா உனக்குநான் ஆட்பட்ட †குற்றமும் குற்றமே 92-6
புக்கொளியூர் அவிநாசியே! கரைக்கால் முதலையைப் பிள்ளை
தரச் சொல்லு காலனையே 92-4
புக்கொளியூரிற் குளத்திடை இழியாக் குளித்த மாணி
‡எனைக்கிறி செய்ததே 92-2
புக்கொளியூரிற் குளத்திடை உள்ளாடப் புக்க மாணி
எனைக்கிறி செய்ததே 92-9
வழிபோவார் தம்மோடும் வந்துடன் கூடிய §மாமணிநீ
ஒழிவ தழகோ சொல்லாய் $அருளோங்கு சடையானே! 92-2

## 63. திருஅஞ்சைக்களத்தீசர் முன்னிலையில் மனைவாழ்க்கையை வெறுத்தேன் என்றது

வெறுத்தேன் மனைவாழ்க்கையை விட்டொழிந்தேன்...
அஞ்சைக்களத்தப்பனே 4-8

---

தருளிச் சுந்தரருக்கு வழிகாட்டினர் என்பது ஒரு வரலாறு (பெரியபுரா. விரிவுரை ஏயர்கோன் 113 பதிகக் குறிப்பு பக்கம் 123.)

(1) "வேட்டுவ வேடம் எடுத்து வழித்துணை மேவி" - கொங்கு மண்டல சதகம்.

(2) சொல்லருங் கிராத வேடம் துணைவியும் தானும் கொண்டு,
மெல்லவே நடந்து வந்து மேதினி புகழ அன்று
ஒல்லுநர் தம்மை நோக்கி உயங்குதல் ஒழித்தி என்று
வல்லுரந் தன்னில் நல்ல வழிதனைக் காட்டி யாங்கே
—துடிசைப் புராணம்.

* உன் திருவருளின் பெருமையைக் காணாதாரும் (இன்று பிள்ளை உயிர்பெற்றெழும் நிகழ்ச்சியால்) காணும்படி அருள்செய்ய வல்லவனே!

† ஆட்பட்டது குற்றம் ஆகாது, ஆதலால் என் வேண்டுகோளும் குற்றம் ஆகாது என்றபடி.

‡ எனை - என்னை! என்ன காரணம்.

§ மாமணி - முதலை உண்ட பாலன். 'மாணிநீ' என்றும் பாடம்.

$ 'அருளோங்கு சடையான்' என்பது அந்தச் சிறுவன் பெயர் என்றும், இது அவனை விளித்துக் கூறியதென்றும் உரைப்பர் (கர்ண பரம்பரை) —பெரியபுராண விரிவுரை, வெள்ளானை, பக்கம் சுO௬.

"'அருட்சடை' என்பது அப்பிள்ளையின் பெயர் போலும்; 'அருட் சடை!' போய்விட்டாயே என்று அவனது பெற்றோர் அழுதது ஆரூரரின் உள்ளத்தைப் பெரிதும் இளக்கியது போலும்.

## 64. வெள்ளை யானையைத் தேவர்களுடன் இறைவன் அனுப்பக், கயிலைக்குச் சென்றது

அந்தரமால் விசும்பில் அழகானை அருள்புரிந்த துந்தரமோ
நெஞ்சமே நொடித்தான்மலை உத்தமனே 100-3
அரவொலி ஆகமங்கள் அறிவார் அறி தோத்திரங்கள், விரவிய வேத
ஒலி விண்ணெலாம் வந்தெதிர்ந்திசைப்ப, வரமலி வாணன்
வந்து வழிதந்தெனக் கேறுவதோர், சிரமலி யானை தந்தான்
நொடித்தான்மலை உத்தமனே 100-3
இந்திரன் மால்பிரமன் எழிலார் மிகுதேவரெல்லாம், வந்தெதிர்
கொள்ள என்னை மத்தயானை அருள்புரிந்து, மந்திர மாமுனிவர்
இவனாரென எம்பெருமான், நந்தமர் ஊரன் என்றான்
நொடித்தான்மலை உத்தமனே 100-9
ஊழிதோ றூழிமுற்றும் உயர்பொன் நொடித்தான் மலையைச்
சூழிசை யின்கரும்பின் சுவைநாவல ஊரன்சொன்ன
ஏழிசை யின்தமிழால் இசைந்தேத்திய பத்தினையும்
ஆழிகடலரையா அஞ்சையப்பர்க் கறிவிப்பதே 100-10
ஊனை உயிர்வெருட்டி ஒள்ளியானை நினைந்திருந்தேன் 100-2
நாயினேனைப் பொருட்படுத்து வான்எனை வந்தெதிர்கொள்ள
மத்தயானை அருள்புரிந்து, *ஊனுயிர் வேறுசெய்தான்
நொடித்தான்மலை உத்தமனே 100-1

---

* "ஊன் உயிர் வேறு செய்தலாவது அவை இவ்வுலகிற் சரித்த நிலையினின்றும் வேறு தன்மையனவாகச் செய்தல். ஊன் வேறு செய்தல் - பசுகரணங்கள் பதிகரணங்களாகச் செய்தல்; உயிர்வேறு செய்தல் - மாயா கருவிகளானறிந்து ஏகதேசப்படாமல் அருளொளியி னடங்கி வியாபகமாக அறியச் செய்தல்". ஆரூரர் சுவையா உடலோடு கயிலைக்குச் சென்றார் என்பதை 'யானையின்மேல் என்னுடல் காட்டு வித்தான்'—100-5. 'கலையா உடலோடு சேரமான ஆரூரன்... வெள்ளானைமேல் கொள்ள'' — திருவிசைப்பா., 19-5. 'ஞான ஆரூரரைச் சேரரை யல்லது நாமறியோம், மானவ யாக்கை யொடும்புகசுவரை வளரொளிப் பூண், வானவ ராலும் மருவற் கரிய வடகயிலைக், கோனவன் கோயிற் பெருந்தவத்தோர் தங்கள் கூட்டத்திலே (திருத்தொண். திரு வந்தாதி-86) என வருவதால் அறிக. "நீறுபட்ட மேனியார் நிகரில் பாதம் ஏத்துவார் வேறுபட்ட சிந்தையார் விண்ணில் எண்ண வல்லரே'' —சம்பந்தர்-ஆனைக்கா. 3-53-2.—பெரியபுராண விரிவுரை-வெள்ளானை. பக்கம் 631.

"ஊன் உயிர் வேறுசெய்தான்"

—ஒப்புமைப் பகுதி பக்கம் கூகூ பார்க்க.

நிலைகெட விண்ணதிர நிலமெங்கும் அதிர்ந்தசைய, மலையிடை யானைஏறி வழியே வருவேன் எதிரே, அலைகட லாலரையன் அலர்கொண்டு முன்வந்திறைஞ்ச, உலையணை யாதவண்ணம் நொடித்தான்மலை உத்தமனே 100-7

மண்ணுலகிற் பிறந்து நம்மை வாழ்த்தும் வழியடியார், பொன்னுலகம் பெறுதல்தொண்டனேன் இன்று கண்டொழிந்தேன் 100-5

வஞ்சனை என்மனமே வைகி வான நாடர்முன்னே, துஞ்சுதல் மாற்றுவித்துத் தொண்டனேன் பரமல்லதொரு, வெஞ்சின ஆனைதந்தான் நொடித்தான்மலை உத்தமனே 100-6

வாழ்வை யுகந்த நெஞ்சே மடவார்தங்கள் வல்வினைப்பட்டாழ முகந்தஎன்னை யதுமாற்றி அமரரெல்லாம், சூழ அருள்புரிந்து தொண்டனேன் பரமல்லதொரு, வேழம் அருள்புரிந்தான் நொடித்தான்மலை உத்தமனே 100-4

வானைமதித்தமரர் வலஞ்செய்தெனை யேறவைக்க, ஆனை அருள் புரிந்தான் நொடித்தான்மலை உத்தமனே 100-2

*விண்ணுலகத் தவர்கள் விரும்ப வெள்ளை யானையின்மேல் என்னுடல் காட்டுவித்தான் நொடித்தான்மலை உத்தமனே 100-5

## 65. கயிலைக்கு அழைத்துச் சென்ற யானையின் வர்ணனை

| | |
|---|---|
| அந்தர மால்விசும்பின் அழகானை | 100-3 |
| அமரர் வலஞ்செய்தெனை ஏறவைக்க ஆனை | 100-2 |
| அழகானை | 100-3 |
| எனக்கு ஏறுவதோர் சிரமலி யானை | 100-8 |
| சிரமலி யானை | 100-8 |
| தொண்டனேன் பரமல்லதொரு (வேழம் - ஆனை) | 100-4, 6 |
| மத்தயானை | 100-1, 9 |
| வெஞ்சின ஆனை | 100-6 |
| வெள்ளை யானை | 100-5 |

## 66. ஏன் யானையை அனுப்பினர்

†ஆனை யுரித்துபகை அடியேனொடு மீளக்கொலோ...எனை ஏற வைக்க ஆனை அருள்புரிந்தான் 100-2

---

* 'என்னுடல் காட்டுவித்தான்' என்பதால் 'களையா உடலோடு' சயிலைக்குச் சென்றார் ஆரூரர் என்பது தெளிவு. 100-1 பக்கம் சOக கீழ்க் குறிப்பைப் பார்க்க.

† இது ஒரு நகைச்சுவைக் காரணம் போலும். தலைப்பு 146-34(2) பார்க்க.

## சுந்தரரைப் பற்றிய பிற விவரங்கள்

### 1. தம்முடைய உடலிடம் கொண்டார் இறைவர் என்றது

சிரக்கண் வாய்செவி மூக்குயர் காயமாகித் தீவினை தீர்த்த
எம்மானை 62-9
நானேல் உன்னடியே நினைந்தேன், நினைதலுமே ஊனேர்
இவ்வுடலம் புகுந்தாய் என் ஒண்சுடரே 21-6

### 2. இறைவரைத் தாம் எங்கே நினைத்தாலும் அங்கே அவர் வருவார், உதவுவார் என்றது

எங்கே போவேனாயினும் அங்கே வந்தென் மனத்தீராய் 77-2
எங்கேனும் இருந்துன் அடியேன் உனை நினைந்தால், அங்கே
வந்தென்னொடும் உடனாகி நின்றருளி 23-2
எங்கேனும் போகினும் எம்பெருமானை நினைந்தக்கால், கொங்கே
புகினும் கூறைகொண் டாறலைப் பாரிலை 92-3

### 3. தந்தை, தாய், சுற்றம் எல்லாம் நீயே; உற்றார், சுற்றத்தை விட்டுவிட்டேன் என்றது

அன்னையே என்னேன், அத்தனே என்னேன், அடிகளே
அமையுமென் றிருந்தேன் 14-2
உற்றார் சுற்றமெனும் அதுவிட்டு நுன் அடைந்தேன், உற்றால்
என்குறைவன் இடரைத் துறந்தொழிந்தேன் 21-4
எம்மான் எந்தை மூத்தப்பன் 52-9
எம்மான் எம்மனை என்றவரிட் டிறந்தொழிந்தார் 21-5
எம்மான் எம்மனை என்றனக் கெட்டனைச் சார்வாகார் 24-3
சுற்றிய சுற்றமும் துணையென் றுகருதேன் 58-2
பற்றாய பெருமானே! மற்றாரை உடையேன் 46-11

### 4. ஞானசம்பந்தர்—நாவுக்கரசர் பாடின பாடல்களைப் பயின்றவர்—ஓதிவந்தவர் என்பது

*நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக் கரசரும் பாடிய நற்றமிழ்
மாலை சொல்லியவே சொல்லி ஏத்துகப்பானை 67-5

---

* "ஆதியன் ஆதிரையன்" எனத் துவக்கும் சுந்தரரது திருநனிபள்ளித் தேவாரப் பதிகம் (97) பண் பஞ்சமம். சம்பந்தப் பெருமானது 'ஆதியன் ஆதிரையன்' எனத் துவக்கும் திருவெண்டுறைப் பதிகமும் (3-61-) பண் பஞ்சமம். இதனால் சுந்தரர் சம்பந்தப் பெருமானது

### 5. சுந்தரருடைய தமிழ்—அவர் தம்மைப் 'புலவன்' என்றது

அருந்தமிழ் ஊரன் 72-11
ஆரூரன் பேர் முடிவைத்த மன்னு புலவன் 41-10

### 6. இறைவன் திருப்புகழை விருப்போடு நல்ல தமிழாற் பாடினார் என்பது

திருப்புகழ் விருப்பால் பன்னலந் தமிழாற் பாடுவேற்கு 69-4
திருப்புகழ் விருப்பால் பாடிய அடியேன் 69-2

### 7. ஏழிசையின் தமிழால் பாடினரென்பது

ஏழிசை யின்தமிழால் இசைந்தேத்திய பத்தினையும் 100-10

### 8. அடிக்கடி தம்மைச் சிவபிரான் திருத்தியது

திருத்தித் திருத்தி வந்தென் சிந்தை இடங்கொள் கயிலாயர் 47-8

### 9. நோய்—பிணி—உலக இன்பத்தினர் செய்யும் செயல்கள்—வினை—இவை வாராமைக் காத்தருளுதல்

உம் கருத்தறியோம் கண்ணும் மூன்றுடையீர் கண்ணேயா யிருந்தால் அங்கத்துறுநோய் களைந்தாள கில்லீர், அடிகேள் உமக் காட்செய அஞ்சுதுமே 2-7
பிணி வண்ணத்த வல்வினை தீர்த்தருளீர் 2 8
பொள்ளல் இவ்வுடலைப் பொருளென்று பொருளும் சுற்றமும் போகமும் ஆகி, மெள்ள நின்றவர் செய்வன எல்லாம் வாராமே தவிர்க்கும் விதியானை 59-6
வெப்பொடு பிணியெல்லாம் தவிர்த்தென்னை ஆட்கொண்டாய் 29-4

### 10. தம் குற்றங்களைப் பிழைகளை இறைவர் பொறுத்ததும், பிழைதவிர அருளுவதும், பழியைத் தவிர்த்ததும்

என் பிழையைப் பொறுப்பானை 59-1
ஒறுத்தாய் நின்னருளில் அடியேன் பிழைத்தனகள் பொறுத்தாய் எத்தனையும் நாயேனைப் பொருட்படுத்திச் செறுத்தாய் 23-3
தேவதேவன் என்சொல் முனியாதே வந்தெனுள்ளம் புகும் வாளொளி புற்றூர் மாணிக்கத்தை மறந்தென்னினைக்கேனே 57-3

---

தேவாரத்தில் நல்ல பயிற்சி கொண்டிருந்தார் என்பதற்கு இடம் இருக்கிறது.

'குயிலும் மயிலும் பயிலும்' என இருவரும் கூறுவதும் காண்க. சம்பந்தர், 1-67-5; சுந்தரர், 99-11.

